
"அதன் வெண்மையிலே
அதன் தூய்மையை
உணருகிறேன்"
என்கிறாள்
எம். என். ராஜம்
அதன் காரணமாகவே நான்
எப்போதும் உபயோகிப்பது
லக்ஸ்
டாய்லெட் சோப்
LUX
TOILET SOAP
எம். என். ராஜம் கூறுவதாவது: "சருமத்தை எழிலோடு வைத்திருக்க நீங்கள் நன்றாகத் தேய்த்திட...."
"லக்ஸ் டாய்லெட் சோப்பின் மணமுள்ள செழிப்பான நுரை"
"பிறகு நீராடித் துடைத்திடுங்கள்!"
"பூரண உடல் வனப்புக்கு, பெரிய சைஸ் உபயோகியுங்கள்"
சினிமா நட்சத்திரங்களின் தூய, வெண்மையான, அழகு தரும் சோப்
LTS. 480-50 TM
இந்தியாவில் தயாரித்தது

மலர் 15
இதழ் 30

# கல்கி

வாரப் பதிப்பு

துர்முகி ஆடி 14

ஜுலை 29, 1956



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.




நேருஜியும், நாஸரும், டிட்டோவும் ப்ரியோனியில் கூடி அந்தகாரத்தில் அகப்பட்டுத்
தவிக்கும் உலகம் உய்வதற்கு வழி காட்டியிருக்கிறார்கள்.



மலர் 15 இதழ் 52

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

துன்முகி ஆடி 14

# மூவர் கண்ட முடிவு

சில தினங்களுக்கு முன் வரையில் எவருக்கும் தெரியாமல் ஒரு மூலையில் இருந்த ப்ரியோனி என்ற சிறிய தீவு திடீரென்று உலகப் பிரசித்தி பெற்றுவிட்டது!

ஆசியா மக்களின் மதிப்பை மாத்திரமல்ல, அகில உலகிலும் உள்ள மகா ஜனங்களின் அபிமானத்தையும், சர்வதேச ராஜதந்திரிகளின் நன்மதிப்பையும் பெற்றுள்ள பாரத தவப் புதல்வர் நேருஜி சென்ற வாரம் அந்தத் தீவுக்கு விஜயம் செய்தார்.

ஐரோப்பாவின் கேந்திர ஸ்தானமாக விளங்கும் யூகோஸ்லாவியா ஜனாதிபதி மார்ஷல் டிட்டோவும் அங்கு விரைந்து சென்றார்.

மத்திய கிழக்குப் பிரதேசத்திலே முன்னணியில் நிற்கும் எகிப்து ஜனாதிபதி கர்னல் நாஸரும் அவர்களைச் சந்திப்பதற்காக அங்கு விஜயம் செய்தார்.

அணுகுண்டு பீதியினாலும் வல்லரசுகளின் போட்டா போட்டியினாலும் அல்லல் பட்டுவரும் உலகத்தின் எதிர்கால விதி என்ன என்பதை நிர்ணயிப்பதற்காகவே அவர்கள் அத் தீவில் கூடி மந்திராலோசனை நடத்தினார்கள்.

எனவே, உலகம் முழுதும் ப்ரியோனித் தீவிலிருந்து வந்த செய்திகளை மிக்க ஆர்வத்துடன் எதிர்பார்த்து வந்ததைக் குறித்து ஆச்சரியப் படுவதற்கில்லை.

பாழும் அணுகுண்டு சோதனைகளுக்கு இலக்கான பிகினித் தீவை உலக மக்கள் கலக்கத்துடனும் பீதியுடனும் நோக்கினர்.

ஆனால், ப்ரியோனித் தீவை உலக மக்கள் நம்பிக்கையுடன் கவனித்துக் கொண்டிருந்தனர். அவர்களுடைய நம்பிக்கை வீண் போகவில்லை.

நேருஜி, மார்ஷல் டிட்டோ, கர்னல் நாஸர் இம் மூன்று தலைவர்களும் கையெழுத்திட்டு வெளியிட்டுள்ள அறிக்கை, பல்வேறு பிரச்னைகளாலும் அல்லல்பட்டு வரும் உலகம் உய்வதற்கு வழி காட்டுவதாக இருக்கிறது. உலக மக்களின் கவலையையும் பீதியையும் அகற்றி, அவர்கள் மனத்தில் நம்பிக்கையை உண்டு பண்ணுவதாக இருக்கிறது.

உலக சமாதானம் ஏற்படுவதற்கு மக்களிடையே நம்பிக்கை நிலவ வேண்டியது இன்றியமையாத முதற்படியல்லவா?

மக்கள் சமுதாயத்தைப் பூண்டோடு அழிக்கவல்ல ராட்சத குண்டுகளின் சோதனைகளை அடியோடு நிறுத்திவிட வேண்டும். அந்தச் சோதனைகள் காற்றையும் நீரையும் விஷ மயமாக்கி மானிட வர்க்கத்துக்கே ஆபத்தை விளைவிப்பதாக இருக்கின்றன. அவ்வாறு சோதனை செய்வது சர்வதேச நீதிக்கு முரணானது என்று நேருஜி, டிட்டோ, நாஸர் இவர்களது அறிக்கை ஆணித்தரமாகக் கூறுகிறது.

அணு சக்தியை அழிவு வேலைகளுக்கு உபயோகிப்பதை அடியோடு நிறுத்தி விடவேண்டும். உலக வல்லரசுகள் கட்சிகளாகப் பிரிந்து நிற்பது உலக அமைதிக்கு முரணானது. கட்சிப் போட்டியும் ஆதிக்க வெறியும் ஒழிந்தால்தான் உலக நாடுகளிடையே ஒற்றுமையும் அமைதியும் ஏற்படுவது சாத்தியமாகும். உலகில் யுத்த பீதி மறைவதற்கு ஆயுதக் குறைப்பு அத்தியாவசியமானது. சர்வதேச வர்த்தகத்துக்குத் தடையாக உள்ள இடையூறுகளும் முட்டுக்கட்டைகளும் அகற்றப்பட வேண்டும். ஆசியாவின் அமைதிக்குக் குடியரசு சீனாவின் ஒத்துழைப்பு அவசியமாதலால், சீனாவுக்கு ஐக்கிய நாடுகள் சபையில் ஸ்தானம் அளிக்க வேண்டும். அல்ஜீரியா நாட்டின் சுதந்திரக் கோரிக்கையை அநுதாபத்துடன் பரிசீலனை செய்து, அப்பிரச்னையைச் சமரசமாகத் தீர்க்க வேண்டும்.

இவைதான் ப்ரியோனித் தீவில கூடிய தலைவர்கள் வெளியிட்டுள்ள அறிக்கையின் முக்கிய அம்சங்களாகும்.



கடந்த 23—7—56 திங்கட்கிழமையன்று திலகரின் நூறாவது ஜெயந்தி வைபவம் காஷ்மீர் முதல் கன்யாகுமரிவரை பாரதநாடெங்கும் குதூகலமாகக் கொண்டாடப்பட்டது. அன்றைய தினம் இந்திய ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத், உதவி ஜனாதிபதி ராதாகிருஷ்ணன், நேருஜி, ராஜாஜி, வினோபாஜி போன்ற மாபெரும் தேசத் தலைவர்கள் மகான் திலகரின் இணையற்ற சேவைகளைப் புகழ்ந்து பாராட்டி அஞ்சலி செலுத்தினார்கள். அன்று சென்னையில் பல இடங்களில் திலகர் ஜெயந்தி விழாக் கூட்டங்கள் நடைபெற்றன. கோகலே மன்றத்தில் பல சங்கங்களின் சார்பாக நடைபெற்ற மாபெரும் விழாவில் ராஜாஜி அவர்கள் கலந்து கொண்டார்கள். "இன்று ஜவாஹர்லால் நேருவைப்போல் அன்று திலகர் பாரத மக்களின் பக்திக்கும் பேரபிமானத்துக்கும் பாத்திரமாக விளங்கினர். பாரத நாட்டில் திலகரின் நாமம் ஒலிக்காத வீடு அந்த நாளில் ஒன்றுகூட இல்லை" என்று கூறி ராஜாஜி திலகரின் பெருமையை விளக்கினர். கோகலே மன்றத்தில் அன்று கூடியிருந்த திரளான மக்களையும் ராஜாஜி பேசுவதையும் படத்தில் காணலாம்.

சமீபத்தில் நேருஜி, பிரிட்டன், பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி முதலிய தேசங்களின் தலைவர்களுடன் பேசி விட்டு வந்துள்ளார். மார்ஷல் டிட்டோவும் மாஸ்கோவுக்கு விஜயம் செய்து ருஷ்யத் தலைவர்களின் கருத்துக்களைத் தெரிந்து கொண்டு வந்துள்ளார். கர்னல் நாஸரின் கருத்துக்களைப் பெரும்பாலான அரபி நாடுகளும் ஒத்துக் கொள்ளலாம் என்பதில் சந்தேகமில்லை.

எனவே, தற்போதைய சூழ்நிலையில் மேற்படி அறிக்கை இரண்டொரு வல்லரசுகளைத் தவிர, பெரும்பாலான உலக நாடுகளின் விருப்பத்தைப் பிரதிபலிக்கின்றன என்றே கூற வேண்டும்.

எனினும் உலகத்தின் எதிர்காலம், அந்த அறிக்கையின் ஷரத்துக்களை ஒட்டி அமெரிக்காவின் நிலைமை என்ன என்பதையே பொறுத்திருக்கிறது. அணுகுண்டு சோதனைகளைக்கூட அமெரிக்கா கைவிட மறுத்து வருகிறது. ருஷ்யாவைச் சந்தேகக் கண்கொண்டு பார்ப்பதும், ருஷ்யா செய்துவரும் நல்ல காரியங்களுக்கு விபரீத வியாக்கியானம் செய்வதும் அமெரிக்க சர்க்கார் தலைவர்களின் கொள்கையாக இருந்து வருகிறது.

எது எப்படியாயினும், அணு குண்டுப் போட்டா போட்டியும், பீதியும் ஒழிந்து உலக சமாதானம் ஏற்படவும், உலக மக்கள் அமைதியாக நல்வாழ்வு நடத்தவும் வேண்டும் என்பதில் ஆர்வம் உள்ள பெரும்பாலான உலக நாடுகளும், இருளில் தத்தளிக்கும் உலகத்துக்கு வழிகாட்டும் ஒளி மிக்க தீபம் போல் விளங்கும் நேருஜி — டிட்டோ — நாஸர் அறிக்கையை மனப்பூர்வமாக வரவேற்கும் என்று நம்புகிறோம்.

# அமெரிக்க உதவி

"எப்பொழுது உலகப் போர் மூண்டு விடுமோ என்ற யுத்த பீதியில் இன்று நாம் இருக்கவில்லை. பார்க்கப் போனால் யுத்தத்திலேயே இருக்கிறோம் என்று சொல்ல வேண்டும். நாசகரமான அணுகுண்டுகளின் சோதனைகள் நிகழ்த்தி உலகக் காற்றையும் நீரையும் விஷ மயமாக்கி உலக மக்களின் மீது போர் தொடுத்து வருகிறார்கள். இதை நாம் எதிர்க்க வேண்டியிருக்கிறது. இந்தச் சமயத்தில், நாம் நம் சுதந்திரப் போரில் கையாண்ட கொள்கையை நினைவு படுத்திக் கொள்வோம். நமக்குத் தீங்கு செய்பவர்களிடமிருந்து உதவியைப் பெற்றுக் கொண்டே, அவர்கள் இழைக்கும் கொடுமையை வாய்ப் பேச்சில் கண்டிப்பதனால் ஒரு பயனும் ஏற்படாது என்று மகாத்மா காந்தி கூறினர். அதன் உண்மையை நாம் உணர்ந்து நடந்து கொண்டோம். நம் எதிராளிகளிடம் நமக்கு

எவ்வித துவேஷமும் கிடையாது. ஆனால் அவர்களுடைய செய்கையைக் கண்டிக்கிறோம். அதை அவர்கள் மனத்தில் பதியும்படி செய்கிறோம். இதுவே காந்தி மகான் காட்டிய வழி.

இப்போது நாம் அமெரிக்கர்களிடமிருந்தும், பிரிட்டிஷாரிடமிருந்தும் நன்றி விசுவாசத்தோடு உதவி பெற்று வருகிறோம். இப்படி நாம் உதவி பெற்று வரும்வரை, நாம் அவர்களின் செய்கையைக் கண்டிப்பது அவர்கள் மனத்தில் பதியாது. நாம் எவ்வளவு கண்டனத் தீர்மானங்கள், அறிக்கைகள் விட்டாலும் அவர்கள் காதில் ஏறாது. ஏன், நாம் அவர்களிடம் உதவி பெற்றால், அவர்கள் செய்யும் நாசகரமான சோதனைகளுக்கு நாம் உடந்தையாக இருக்கிறோம் என்றே கூடச் சொல்ல வேண்டும்.

அணு சோதனைகளினால் உலகத்துக்கு ஏற்படும் தீங்குகளை விட, நாம் அவர்களிடமிருந்து பெறும் உதவி பெரிதா என்ன? ஒருநாளுமில்லை. ஆகவே, காற்றையும் நீரையும் ஓயாமல் விஷமேற்றிப் பாழாக்கி வரும் பைசாச குண்டுகளின் சோதனைகளை நிறுத்த வேண்டும் என்று நாம் சொல்லி வருவதைக் காது கொடுத்துக் கேட்க வேண்டும் என்று விரும்பினால், நம் சொற்களை அலட்சியம் செய்பவர்களிடமிருந்து கிடைத்து வரும் உதவி ''வேண்டாம்'' என்று சொல்ல வேண்டும். தியாகம் செய்ய வேண்டும்.

நம்முடைய தேசியத் திட்டங்கள் நிச்சயம் வெற்றி பெறப் போகின்றன. இந்த நாடுகளிடமிருந்து கிடைத்து வரும் உதவி நின்று போவதால், திட்டங்கள் நிறைவேறாமல் நின்றுவிடப் போவதில்லை. சற்றுக் காலதாமதமாகலாம். அவ்வளவுதான். ஆனால் அமெரிக்க உதவியைத் தள்ளி விடும் தியாகமே, நமது ஐந்தாண்டுத் திட்டப் பிரசாரத்தில் ஆன்மசக்தியைச் சேர்க்க உதவும். உலக க்ஷேமம் என்ற பெரும் லட்சியத்தை தார்மிக முறையில் அடைந்த பலனும் பெறலாம்!''

இம்மாதிரி ராஜாஜி ஜூலை 28-ம் தேதி ''சுயராஜ்யா'' இதழில் எழுதியிருக்கிறார்.

காந்தி மகான் காண்பித்த வழியைப் பின்பற்றி வெற்றி பெற்ற நேருஜி, பந்த் முதலிய தலைவர்களே இன்று புதுதில்லியில் ஆட்சி பீடத்தில் இருக்கிறார்கள். காந்தி மகானின் இதயக் குரல் மீண்டும் இன்று ராஜாஜி மூலமாக வெளிப்பட்டிருக்கிறது. இக் குரல் தில்லியிலிருக்கும் நமது தலைவர்கள் காதில் புகும் என்றே நம்புகிறோம்.




''மனித குலத்தை அழிக்கவல்ல அணு - ஹைட்ரஜன் குண்டு சோதனைகளை நிறுத்த மறுக்கும் அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹவர் தம்மை ஒரு உண்மைக் கிறிஸ்தவர் என்று எவ்வாறு சொல்லிக் கொள்ள முடியும்?'' என்று பிரிட்டிஷ் தொழிற்கட்சித் தலைவர் பெவான் கேட்கிறார்.

# 1956
# ப்ளிமத்

## கவர்ச்சி

## உல்லாஸம்



இப்பொழுது காட்சியிலுள்ளது

**டி.வி.சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்,**
மதுரை & கிளைகள்.

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்,**
சென்னை – 6

டி. வி. எஸ். சப் - டீலர்கள் :

**மெஸர்ஸ் C. C. ஆட்டோமோபைல்ஸ் லிட்.**
கோழிக்கோடு

*

**மெஸர்ஸ் P.N. கிருஷ்ணஅய்யர் & சன்ஸ் லிட்.**
திருச்சூர்

*

**மிஸ்டர் U. சுப்ராய நாயக்**
கண்டோன்மெண்ட், மங்களூர்

சுந்தரம் மோட்டார்ஸ் சப்-டீலர்கள் :

**மெஸர்ஸ் D. S. ஆட்டோமோபைல்ஸ்**
நெல்லூர்

*

**மெஸர்ஸ் டோனீஸ் காரேஜ்**
29, மகாத்மா காந்தி ரோடு, பங்களூர்

*

**மெஸர்ஸ் கரபதி காரேஜ்**
**(ஜெனரல் மெஷினரி & ஆட்டோ ஸ்டோர்ஸ்)**
காந்தி நகர், விஜயவாடா

TVS2-89 TH

# என்ன சேதி?

## பாராட்டுகிறோம்

ஏழை எளிய மக்களின் வாகனமான சைக்கிளுக்குச் சென்னை நகரில் இனி மேல் வரி கிடையாது என்னும் முடிவை அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம். இம் முடிவைச் சென்ற பிப்ரவரி 21-ந் தேதியே சென்னை நகரசபை நிறைவேற்ற முயன்றது. ஆனால் இந்த நல்ல காரியத்துக்குச் சென்னை சர்க்கார் முட்டுக்கட்டை போட்டு விட்டார்கள்.

கடவுள் வரம் கொடுத்தாலும் பூசாரி தடை செய்வதைப் போல ஆகிவிட்டதே என்று ஏழை எளிய மக்கள் எண்ணி வேதனைப்பட்டனர்; கூட்டங்கள் போட்டனர்; மகஜர்களும், தூதுகோஷ்டிகளும் சைக்கிள் வரியை ரத்து செய்ய வேண்டுமென்று வற்புறுத்திக் கிளர்ச்சி செய்தன. பத்திரிகைகள் சர்க்காரின் போக்கைப் பலமாகக் கண்டித்து எழுதின.

மக்களின் குரலுக்குச் சர்க்கார் மதிப்புக் கொடுத்து, சைக்கிள் வரி கிடையாது என்ற சென்னை நகரசபையின் முடிவை இப்போது அங்கீகரித்திருக்கிறார்கள். வீண் பிடிவாதம் காட்டாமல் இந்த நல்ல முடிவை வெளியிட்ட சென்னை சர்க்காரை மனமாரப் பாராட்டுகிறோம்.

## தொழிலாளர் முன்னேற்றம்

தொழிலாளர்களிடையே ஒற்றுமை இராவிடில், அதனால் அவர்களுக்கோ அல்லது நாட்டுக்கோ நன்மை ஏற்படாது. இது வரையில் அகில இந்திய ரயில்வேத் தொழிலாளர்கள் இரு பிரிவாகப் பிரிந்து நின்றனர். இதனால், எந்தப் பிரிவினரின் கோரிக்கைக்கு இணங்குவது என்ற கேள்வி எழுந்ததால், அதிகாரிகள் உருவாக எதுவும் செய்ய முடியாமல் இருந்தது. இப்பொழுது இரு பிரிவுத் தலைவர்களும் ஒன்றுகூடி ஒரே சங்கமாகப் பணியாற்ற முயற்சித்து வருகிறார்கள். தொழிலாளர் இயக்கம் ஒழுங்காக வளர்வதற்கு அவர்கள் மூன்று நிபந்தனைகள் விதித்திருக்கின்றனர். 1. ரயில்வேத் தொழிலாளர்கள் போலிச் சங்கங்களின் அலுவல்களில் ஈடுபடக் கூடாது. 2. அவர்கள் சத்தியத்தையும் அஹிம்சையையும் கடைப்பிடிக்க வேண்டும். 3. வேறு சமரச முறைகள் ஒன்றும் பயன்படாமல் போனாலொழிய வேலை நிறுத்தம் செய்யக் கூடாது.

இந்த மூன்று நிபந்தனைகளுக்கும் சம்மதித்துக் கையெழுத்திடுபவர்கள் தான் யூனியனில் அங்கத்தினர்களாகச் சேரலாம். இந்த நிபந்தனைகள் இதர தொழிலாளர்களுக்கும் பொருந்தும் என்பதில் சந்தேகமில்லை. தொழிலாளர்கள் போலிச் சங்கங்களுடன் தொடர்பு வைத்துக் கொள்வதாலும், திடீர் வேலை நிறுத்தங்களில் ஈடுபடுவதாலும் தங்களுக்குத் தாங்களே துன்பத்தைத் தேடிக் கொண்டவர்கள் ஆகிறார்கள். எனவே, பொதுவாக எல்லாத் தொழிலாளர்களும் மேற்படி ரயில்வே தொழிலாளர் தலைவர்களின் வார்த்தைகளுக்குச் செவி சாய்ப்பார்களாயின், அவர்களுடைய உழைப்பை அடிப்படையாகக் கொண்ட நாட்டின் சுபிட்சத்துக்கு இடையூறு ஏற்படாமல் இருக்கும்.

## பீதிக்குக் காரணமில்லை

இந்தோனேஷ்ய ஜனாதிபதி டாக்டர் சுகர்னோ பாகிஸ்தானுக்கு விஜயம்

செய்வதற்குத் திட்டமிட்டிருக்கிறார். இந்தப் பிரயாணத்தை ரத்து செய்து விட வேண்டும் என்று வற்புறுத்தி அந்நாட்டுப் பிரபல பத்திரிகை யொன்று எழுதி இருக்கிறது. பாகிஸ்தானுக்கு விஜயம் செய்யும் பிரமுகர்களை யெல்லாம் பாகிஸ்தான் சர்க்கார் தலைவர்கள் காஷ்மீர் பற்றிப் பாகிஸ்தானுக்கு ஆதரவாகப் பேசும்படி தொந்தரவு செய்கிறார்களாம். சமீபத்தில் அங்கு சென்ற இந்தோனேஷ்ய அயல் நாட்டு மந்திரி இத்தகைய சங்கடத்துக்கு உள்ளாக நேர்ந்ததாம். ஆகையால் காஷ்மீர் பிரச்னையை எழுப்புவதில்லை என்று உறுதி கூறினாலொழியப் பாகிஸ்தானுக்கு டாக்டர் சுகர்ணோ செல்லக் கூடாது என்று அப் பத்திரிகை கூறுவது நியாயமே அல்லவா?

ஆனாலும் இந்தோனேஷ்ய சுதந்திரப் போராட்டத்தின் வெற்றிக்கு இந்தியா செய்த உதவியையும், உலக அரசியலில் இந்தியாவின் நேர்மையையும் இடைவிடாது எடுத்துக் கூறி வரும் சுகர்ணோ, காஷ்மீர் பிரச்னைக்கு யார் பொறுப்பாளி என்பதை அறியாமல் இருக்க முடியாது. எனவே, பாகிஸ்தானின் வற்புறுத்தலுக்கு இணங்கி, சுகர்ணோ காஷ்மீர் விஷயமாகத் தமது கருத்தை மாற்றிக் கொண்டு விடுவார் என்று யாரும் பீதி அடைய வேண்டிய அவசியமில்லை.

## நமது அனுதாபம்

**ப**ம்பாய் ராஜ்யத்தை அடுத்துள்ள கட்ச் பிரதேசத்தில் ஏற்பட்ட பூகம்பத்தினால் விளைந்துள்ள உயிர்ச் சேதமும் பொருட்சேதமும் எவரையும் திடுக்கிட வைப்பதாக இருக்கின்றன. சென்ற நூற்று முப்பத்தேழு ஆண்டு காலத்தில் இதுபோன்ற கொடிய பூகம்பம் ஏற்பட்டதில்லையாம். மேற்படி பூகம்பத்தினால் நூற்றுக்கணக்கில் உயிர்ச்சேதம் ஏற்பட்டிருப்பதுடன் ஆயிரக்கணக்கில் வீடுகளும் நாசமாகி விட்டன. பல கிராமங்கள் அழிந்து மக்கள் சோகத்தில் ஆழ்ந்து கிடப்பதாகச் செய்திகள் கூறுகின்றன. இராணுவச் சிப்பாய்களும் போலீசாரும் மக்களுக்கு உதவியளித்து வருவதுடன், கஷ்ட நிவாரண வேலைகளுக்காக இந்திய சர்க்கார் ரூ. 75,000 உதவியிருக்கின்றனர். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் ரூ. 5000 அனுப்பி யிருக்கிறது. இயற்கையின் உற்பாதத்துக்கு இலக்கான கட்ச் மக்களின் கஷ்ட நஷ்டங்களும் துன்பமும் தீர்ந்து, அவர்கள் மீண்டும் நல் வாழ்வு பெறவேண்டும். இதுவே அனைவரின் விருப்பமும் பிரார்த்தனையுமாகும்.

# பனித் துளி

"மேற்கு ஜெர்மன் பிரதமரை அடினார், அட்நாயர், அடனார் என்று பலவிதமாக உச்சரிப்பதால் எதை எழுதுவதென்று புரியவில்லை." ஒரு நிருபர்

**'அட நாராயணா' என்று எழுதாமல் இருந்தால் சரிதான்!**

★

"வட திருவாங்கூரில் குருப்பம்பாடி என்னும் கிராமத்தில் 30 வயது ஸ்திரீயை 85 வயதுள்ள கிழவர் ஒருவர் பொருந்தாத் திருமணம் செய்து கொண்டார்." —செய்தி

**அந்த மலையாள நாட்டுப் பெரியார் நீடூழி வாழ்க!**

★

"ஸ்ரீநகரிலிருந்து தில்லிக்கு பக்ஷி குலாம் மகம்மது அவசரமாகப் பறந்து சென்றார்." —செய்தி

**பெயரே பக்ஷியானதால் அவசரமாகப் பறந்ததில் ஆச்சரியமில்லை!**

★

"திலகர் நூற்றாண்டு விழாவை ஒட்டி ஆமதாபாத்தில் உள்ள ஒரு ரஸ்தாவுக்குத் திலகர் பெயரைச் சூட்ட நகர சபை முடிவு செய்துள்ளது." —செய்தி

**அதைக்காட்டிலும் திலகர் காட்டிய ரஸ்தாவில் செல்வதல்லவா முக்கியம்?**

★

"தென்னை மரங்களில் காய்க்கும் தேங்காய்களில் எல்லாமே தேறுவதில்லை. சில காய்கள் சரியாக வளர்ச்சி பெறாமல் உள் புறம் காலியாகி விடுகின்றன. இதனால் இந்திய சர்க்காருக்கு ஒன்றரைக் கோடி ரூபாய் நஷ்டமாகிறது." —செய்தி

**இந்த ஒன்றரைக் கோடிக்கு வட்டி நஷ்டம் வேறு ஆகவில்லையா?**

★

"ஆமதாபாத்தில் ஒரு பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் மாணாக்கர்களுக்குப் பூகம்பத்தைப் பற்றிப் பாடம் நடத்திப் புரிய வைத்துக் கொண்டிருந்தார். அப்போது நிஜமாகவே அங்கே பூகம்பம் ஏற்பட்டுப் பூமி அதிர்ந்தது." —செய்தி

**மாணவர்கள் பூகம்பம் என்பது என்னவென்று புரிந்து கொண்டிருப்பார்கள் என்று நம்புகிறோம்!**







Isopan Ultra

# ரகுபதி ராகவ

## 37

**[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]**

ஹிந்து தர்மத்தில் ஏசுவுக்கும் இடமுண்டு, மகம்மது நபிக்கும் இடமுண்டு. பார்ஸி ஆசாரியர் ஸோரோஆஸ்தருக்கும் யூதர்களுடைய ஆசாரியர் மோஸஸுக்கும் — எல்லாருக்குமே ஸ்தானம் உண்டு. யாரையும் ஹிந்து தர்மம் அப்புறப்படுத்தாது. இவர்கள் எல்லாருமே பகவானை அடைய வழி காட்டுகிறவர்கள் என்பது ஹிந்து சாஸ்திரம். ஒரே தோட்டத்தில் பல்வேறு புஷ்பங்கள் மலர்ந்திருப்பதைப் போல் பல் வேறு சமயங்களும் மலர்ந்திருக்கின்றன. ஒரு மரத்தில் பல கிளைகள் கிளைத்திருப்பது போல் பல மதங்களும் உண்மை என்கிற மரத்திலிருந்து கிளைத்திருக்கின்றன. எல்லா சமயங்களுமே உண்மையை விளக்குகின்றன. ஆனால் உபதேசத்தைப் பெறும் மக்கள் அந்த அந்த சமயங்களை எடுத்துச் சொல்லும் போது தங்களுடைய குற்றங் குறைகளுக்கு இசைய வளைத்துச் சொல்லுகிறார்கள். ஒரு மதத்திலிருந்து இன்னொரு மதத்துக்கு மாறும் தற்கால வழக்கத்தை நான் கொஞ்சங்கூட ஒப்புக் கொள்ள முடியாது. தற்போது இந்தியாவிலும் மற்றத் தேசங்களிலும் நடந்து வரும் ஒரு மதத்திலிருந்து மற்றொரு மதத்துக்கு மாற்றும் முயற்சிகள் பெருந் தவறாகும். உலகத்தில் பூசல்கள் அடங்கி, சமாதானம் நிலைப்பதற்கு இந்த முயற்சிகள் பெருந் தடையாகும்.

சமயப் பூசல்கள் என்பதே ஆண்டவன் சந்நிதானத்தை அவமதிப்பதாகும். ஆண்டவன் சந்நிதிக்கு அழைத்துப் போகும் உபதேசங்களுக்குள் வெறுப்புக்கும் பூசலுக்கும் இடம் ஏது? இந்தப் பேச்சே பாபமாகும். எப்படியாயினும் அந்தப் பூசல்கள் இந்தியாவில் நடந்து கொண்டு வருகின்றன. சமயம் என்பதே பிறந்த புனித பூமியாகிய இந்தியாவில் இந்தப் பூசல் நடைபெற்று வருகிறது. இது ஒரு பெருஞ் சோதனை.

ஒரு ஹிந்து கிறிஸ்தவனாக வேண்டும் என்று ஏன் கிறிஸ்தவர்கள் விரும்புகிறார்கள்? கிறிஸ்தவன் ஒருவன் ஹிந்துவாக மாற வேண்டும் என்று ஏன் ஹிந்துக்கள் விரும்ப வேண்டும்? நல்லவனாகவும் தெய்வபக்தி யுள்ளவனாகவும் இருக்கும் ஒருவனை நாம் சும்மா விட்டு விடாமல் ஏன் மதமாற்றத்தைக் கோருகிறோம்? ஒருவனுடைய குணமும் சீலமும் சரியாக இருந்தால் அவன் எந்தக் கோயிலுக்கு, அல்லது மசூதிக்குப் போனால் என்ன? இதைப் பற்றி நாம் சண்டை போட்டுக் கொள்வது நாஸ்திகத்தில்தான் முடியும். சச்சரவிலும் ரத்தப் பிரவாகத்திலும்தான் கொண்டு போய்ச் சேர்க்கும்.

**[ஹரிஜன் 30—1—37]**

பிற மதங்களைப் பற்றியாவது சமய நூல்களைப் பற்றியாவது குற்றங் குறைகளை எடுத்துச் சொல்வது என்னுடைய வேலையல்ல. அவற்றில் நான் காணும் பேருண்மைகளை எடுத்துக் காட்டி, பிரசுரம் செய்வதே எனக்குக் கௌரவம் தரும் பணியாகும். பிறருடைய மதாசாரங்களிலும் பிரபந்தங்களிலுமுள்ள குற்றங்களை எடுத்து விமர்சனம் செய்வது என் தொழில் அல்ல. அவற்றில் நான் காணும் நல்ல விஷயங்களை எடுத்துக் காட்டுவதே எனக்கு மகிழ்ச்சி தருகிறது. இஸ்லாமியத்தில் எனக்கு ஏதேனும் சரியாக விளங்காமற் போனால் எனக்கு நண்பர்களாகிய நல்ல முஸல்மான் பக்தர்களைக்கொண்டு விளக்கம் பெற முயற்சிப்பேன். எந்த மதமாயினும் சரி, அந்த மதத்தைச் சேர்ந்த நல்ல பக்தர்களைக் கொண்டுதான் சரியாகப் புரிந்து கொள்ள முடியும்.

பிற மதங்களையும் ஆசாரங்களையும் இப்படித்தான் மரியாதையாக அணுக வேண்டும். அப்போதுதான் சர்வ சமய சமத்துவத்தை உணர முடியும். பிற சமயங்களைப் பற்றி எதுவாயினும் என்னுடைய சமயமாகிய ஹிந்து சம்பிரதாயத்தில் என்ன குறைகளை நான் காணுகிறேனோ அவற்றை எடுத்துக் காட்டி அந்தக் குறைகளைத் தீர்க்கவும் குற்றங்களைக் களையவும் முயல்வது என்னுடைய கடமையுமாகும்; உரிமையுமாகும். ஒரு மதத்தைச் சேர்ந்தவர் பிற மதங்களின் குற்றங் குறைகளை எடுத்துப் பட்டியல் போடுவது மடமையாகும். ஹிந்து மதாசாரத்திலுள்ள

குறைகளைப் பிற மதத்தினர் விமரிசிப்ப தற்கு அதிகாரமில்லை. ஹிந்து சாஸ்திர சம்பிரதாயங்களை அவர்கள் உண்மைப் பொருள் அறிந்து சரியாகப் புரிந்து கொள்ள முடியாது. அவர்களுடைய பார்வை தெளிவான பார்வையாகாது. ஹிந்துக்கள் அல்லாதவர்கள் ஹிந்து தர்மத்தையும் சம்பிரதாயங்களையும் குற்றம் சொல்லும்போது அவர்கள் சொல்வது பிசகு என்று நான் காண்ப தைப் போலவே, இஸ்லாமியத்தை யாவது கிறிஸ்தவ மதத்தையாவது நம் மவர்கள் விமர்சனம் செய்து குற்றங் கள் எடுத்துக் காட்டுவது தவறு என்று நான் காண்கிறேன்.

[ஹரிஜன் 13—3—37]

இஸ்லாமியர்களுடைய 'அல்லா'வும் கிறிஸ்தவர்களுடைய 'தேவனும்' ஹிந் துக்களுடைய ஈசுவரனும் ஒருவனே யாகும். ஈசுவரனுக்கு ஹிந்து சம்பிர தாயத்தில் எண்ணற்ற நாமங்களுண்டு. இஸ்லாமியரும் ஆண்டவனுக்குப் பல பெயர்கள் கொடுத்திருக்கிறார்கள். பெயர்கள் எல்லாம் லட்சணங்களைக் குறிக்கும். கல்யாண குணங்களை வைத் துப் பல பெயர்கள் கொடுக்கிறோம். சொல்லுக்கும் கருத்துக்கும் அடங்காத பரம்பொருளின் லட்சணங்களைக் காண முயல்கிறோம். முற்றிலும் காண்பது முடியாத காரியம். ஆண்டவனை நாம் வணங்குவது உண்மையானால் உலகத்தி லுள்ள பல மக்களும் நம்முடைய சகோ தரர்கள் என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். எல்லாச் சமயங்களும் சமம் என்பதையும் ஒப்புக் கொள்ள வேண்டும்.

[ஹரிஜன் 14—5—38]

# படித்துப் பாருங்கள்

## மலையாளத்தில் ரிக்வேதம்

உலகத்தில் மிகத் தொன்மையான நூல் களுள் ஹிந்துக்களின் வேதநூல் ஒன்று என்பது யாவரும் அறிந்ததாகும். அது புனிதத் தன்மை வாய்ந்தது. தொன்று தொட்டு வழங்கி வரும் பாரத சமுதாயத் தின் நாகரிகத்துக்கும் எண்ணிறந்த சமயக் கொள்கைகளுக்கும் வேதமே ஆதாரமாக இருந்து வருகிறது. அது ஆதியந்தமற்றது. மனிதன் எழுத்தறிவு பெறுவதற்கு முன் அது பல்லாயிரம் ஆண்டுகளாக வாய்மொழியில் வழங்கி வந்துள்ளது. காலதேச வரையறை இல்லாதது. பற்பல ரிஷிகள் பற்பல சந்தர்ப் பங்களில் வாய்மொழியில் வழங்கி வந்த மந்திரங்களை வேதவியாஸ முனிவர் முறைப் படுத்தி வகுத்தவையே வேதங்கள் என்பர். இவற்றை சுரோத்திரியர் என்ற அந்தண வகுப்பினர் இன்றுவரை அப்பழுக்கில்லாது காப்பாற்றி வந்துள்ளனர். அவர்கள் வேத வாக்கியங்களைத் தொடர்ச்சியாகப் படிப்ப தோடு பதம், கிரமம், கனம், ஜடை என்ற பல முறைகளாகப் பிரித்துப் படித்துத் தலை முறை தலைமுறையாக மனப்பாடம் செய்து போற்றி வந்துள்ளனர்.

ஹிந்து வேத நூல்களை மேனாட்டு அறி ஞர்கள் முதன் முதலாகக் கண்டபோது கொலம்பஸ் கண்டுபிடித்த அமெரிக்காவை விட அவற்றைச் சிறந்தவையாகக் கருதினர்! மாக்ஸ் முல்லர் முதலிய மேனாட்டு அறி ஞர்கள் வேதங்களை சாங்கோபாங்கமாகப் பயின்று சிறந்த முறையில் மொழி பெயர்த் துள்ளனர். ஒரு சில அறிஞர்கள் வேதத் தின் 'குறிப்பிட்ட பகுதிகளையும் கருத்துக் களையும் நீண்ட காலம் நுணுகி ஆய்ந்து ஆராய்ச்சியுரைகளைப் பிரகரித்துள்ளனர்.

வேதம் நான்கினுள் முதன்மை வாய்ந்தது ரிக்வேதம். அது பெரும்பான்மையும் இந்திரன் வருணன் வாயு போன்ற தேவர்களை வழி படு வதைப் பொருளாகக் கொண்டது. வேத ரிஷிகள் அந்தத் தேவர்களுக் கெல்லாம் மேலான முதல்வனையும் ஞானக் கண்ணால் கண்டவர்கள். அவர்கள் இயற்கையின் சௌந் தரியத்தைக் கண்டு ஆனந்தபரவசமாகிச் சித்திரித்ததுதான் ரிக்வேதமாகும். இதன் மகிமையை யறிந்து பாரதியார் ரிக்வேதத்தின் முக்கியமான சில பகுதிகளைத் தமது தெவி ணும் இனிய தமிழ் மொழியில் பெயர்த்துத் தமிழ் உலகுக்கு உதவி யிருக்கின்றார். இப் போது மகாகவி வள்ளத்தோள் ரிக்வேதம் முழுவதையும் மலையாளத்தில் மொழிபெயர்த் துத் தந்துள்ளார். ஸ்ரீ வள்ளத்தோள் 'ராமா யணம்' முதலிய மாபெரும் நூல்களைத் தமது தாய்மொழியில் அருமையாக மொழி பெயர்த்தவர். அற்புதமான கவிதைகள் பல புனைந்து சென்னை அரசாங்கத்தாரால் கவிஞர் பெருமான் என்ற பட்டம் சூட்டப்பெற்றவர். அவர் தெய்வத் திருநூலான ரிக் வேதத்தை மலையாள மொழியில் பெயர்த்தெழுத எவ் விதத்திலும் தகுதி வாய்ந்தவர்.

ஸர்தார் கெ. எம். பணிக்கர் முகவுரை யொன்று வரைந்து நூலைச் சிறப்பித்துள் ளார். மலையாள மக்கள் இம்மொழிபெயர்ப் பைப் போற்றிப் புகழ்வர் என்பதில் சந்தேக மில்லை. பத்து மண்டலம் கொண்ட ரிக் வேதத்தின் முதல் மண்டலம் இப்போது வெளிவந்துள்ளது. எஞ்சிய பகுதிகளையும் கவிஞர் வள்ளத்தோள் அவர்கள் விரைவில் வெளியாக்குவார் என நம்பலாம். நூலின் சிறப்புக்கேற்றபடி பதிப்பும் வெகு நேர்த்தி யான முறையில் அமைந்துள்ளது.

(நூலின் விலை ரூ. 14. கிடைக்குமிடம்: Vallathol Grandhalayam, Choruthuruthy, Travancore - Cochin State.)

—ஸ்ரீ. ஹரிஹர சாஸ்திரி

# அவள் எழிலுருவம்...



ஆகா, அவளுடைய சௌந்தர்யத் தோற்றமே தோற்றம், எழில் நடையே நடை! சருமப் பொலிவும் சேர்ந்து கொண்டதால் அவள் அழகு அதிகரித்துக் காணுகிறது.

....அவளின் மென்மையான மலர் போன்ற, **மேனியின்** ரகசியம் **மேட்டூர் சந்தன** சோப் தான். சந்தனத்தின் உண்மையான நறுமணம் கமழும் **மேட்டூர் சந்தன** சோப்பின் நுரை சருமத்தினுள் ஊடுருவிச் சென்று, மழமழப்பையும் காந்தியையும் தருகிறது.

**மேட்டூர் சந்தன** சோப்பின் நறுமண சூக்ஷ்மம் அதன் கலவையில் தான் இருக்கிறது. கலவையே அதன் தனிச்சிறப்புக்குக் காரணம்.

**மேட்டூர் சந்தன** சோப்பின் புதிய பெட்டியைப் பார்த்து, **மேட்டூர் சந்தன சோப்** என்று கேட்டு வாங்குங்கள்.



தயாரிப்பு :

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**
**மேட்டூர் அணை** **சேலம் ஜில்லா**

**மானேஜிங் ஏஜெண்ட்ஸ் : சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிட்.**

# அபலை அஞ்சுகம்

கி.ரா.கோபாலன்



## 4. நிர்மலாவின் நெஞ்சம்

பார்வதி அம்மாளுக்கு வயது எழுபத்தைந்துக்கு மேலிருக்கும். அவள் உடல் நிலை தளர்ந்திருந்தது. கண் பார்வை மிகவும் மங்கி இருந்தது. காதும் சிறிது கேட்காது. வயதான காரணத்தினால் புத்தியிலும் சிறிது தடுமாற்றம் ஏற்பட்டிருந்தது. பொதுவாகச் சொல்லப் போனால் பிறருடைய உதவியில்லாமல் எதையும் செய்யத் தகுதியுடையவளாக அவளில்லை. அந்தக் கிராமத்திலேயே அவர்கள் குடும்பம் ஒரு ராஜ குடும்பத்தைப் போல. மேகராஜபுரம் மாத்திரம் அல்ல. அதைச் சுற்றிலும் உள்ள கிராமங்களெல்லாம் ஒரு காலத்தில் அவர்களுக்குச் சொந்தமாக இருந்தன. கால வேகத்தில் ஏற்பட்ட மாறுதலினால் அந்தக் கிராமங்களெல்லாம் கைமாறி விட்டன. எப்படி இருப்பினும் உயர்ந்த செல்வ நிலையை அந்தக் குடும்பம் அடைந்திருந்தது என்றால் மிகையாகாது. மேகராஜபுரம் ஜமீனுக்குச் சரியான ஆண் வாரிசு ஒருவரும் இல்லாத காரணத்தினால், பார்வதி

அம்மாளே எல்லாச் சொத்துக்கும் சொந்தக்காரியானாள். இந்தத் தள்ளாத வயதில் பெருத்த நிலபுலன்களுடைய அக் குடும்பத்தை அவள் எப்படி நிர்வகிக்க முடியும்? நிர்மலா என்ற படித்த பெண் ஒருத்தி நிர்வாகங்களைக் கெட்டிக்காரத்தனமாகக் கவனித்துப் பார்வதிக்குப் பேருதவி புரிந்து வந்தாள்.

நிர்மலாவுக்கு வயது இருபத்திரண்டு இருக்கும். அவள் பி.ஏ. வரையில் படித்திருந்தாள். அவள் படித்த பெண். கெட்டிக்காரி என்பது அவளுடைய பார்வையிலிருந்தும், பேச்சிலிருந்தும் நன்கு விளங்கும்.

நிர்மலா மேகராஜபுரத்தில் வசித்து வந்த டாக்டர் உமாபதி என்பவரின் வளர்ப்புப் பெண். அவர் திருவாரூர் அரசாங்க வைத்தியசாலையின் நிர்வாகத்தைக் கவனித்து வந்தபோது, அங்கு பிரசவத்துக்கு வந்த ஒரு பெண்



தான் பெற்ற குழந்தையை ஆஸ்பத்திரியிலேயே விட்டு விட்டுத் தெரியாமல் எங்கோ ஓடிவிட்டாள். அனாதையாக விடப்பட்ட அந்தக் குழந்தை மிகவும் அழகாக இருந்ததால் அதை டாக்டர் உமாபதியே எடுத்து வளர்த்துக் கொண்டிருந்தார் என்று கேள்வி. அந்தக் குழந்தைதான் நிர்மலா என்று சொல்ல வேண்டுமா?

உமாபதிக்கு வேறு சந்ததி கிடையாதாகையால் நிர்மலாவைத் தன் சொந்தப் பெண் போல அருமையும் பெருமையுமாக வளர்த்து வந்தார். அவர் சம்பாதித்த செல்வத்தை யெல்லாம் நிர்மலாவைக் காப்பாற்றுவதிலேயே செலவிட்டார். வயதான காலத்தில் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற பின் அவர் மேகராஜபுரத்துக்கு வந்து வைத்தியத்துறையில் கிராமஜனங்களுக்காகப் பாடுபடத் தொடங்கினார். இதன் காரணமாக டாக்டர் உமாபதிக்கும் பார்வதியம்மாளின் குடும்பத்துக்கும் நெருங்கிய பழக்கமேற்பட்டது. அவரே பார்வதி அம்மாளின் குடும்ப வைத்தியராக இருந்தார். நிர்மலா நன்கு படித்துச் சிறந்த அழகோடு கூடிய பருவ மங்கையான சமயத்தில் அவளை அனாதையாக விட்டு விட்டு டாக்டர் இறந்துவிட்டார். பெருந் தன்மையும் உபகார சிந்தையும் நிறைந்த டாக்டர் தான் சம்பாதித்த செல்வங்களை யெல்லாம் ஏழை எளியவர்களுக்காகவே செலவு செய்துவிட்டபடியால் நிர்மலாவை ஏழைமை நிலையில் விட்டு விட்டுத்தான் இறந்தார். பார்வதியம்மாள் நிர்மலாவின் நிர்க்கதியான நிலைமையை உணர்ந்து, படித்த பெண்ணாகிய அவள் தன் குடும்ப நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்ளட்டும் என்று தீர்மானித்து அவளைத் தன் வீட்டோடு வைத்துக் கொண்டாள். நிர்மலாவும் மிகவும் கெட்டிக்காரத்தனமாக ஜமீன் நிர்வாகங்களைக் கவனித்து வந்தாள். நன்கு படித்ததின் காரணமோ என்னவோ, கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்பதை அவள் முக்கியமாகக் கருதவில்லை.

நிர்மலா உடல் வனப்புள்ள அழகி. அவளைப் பார்த்தவர்கள் யாவரும் சிறிதும் மயங்காமல் இருக்க மாட்டார்கள். அதிக நகைகள் அணிந்து கொள்ளாமல் ஆடம்பரமற்ற உடையோடு அவள் காட்சியளித்தாலும் அவள் அழகும் பேச்சும் எவரையும் வசீகரிக்கக்கூடியதாய்த்தான் இருந்தன. அந்த வீட்டில் நிர்மலா வைத்ததுதான் சட்டமாய் இருந்தது. பண விஷயம், கொடுக்கல் வாங்கல் கணக்குகள், கஷ்டப் போக்குவரத்து எல்லாம் நிர்மலாவின் நிர்வாகத்தில்தான் இருந்தன. எஜமானியாகிய பார்வதி அம்மாள் கூட நிர்மலாவின் ஆலோசனைப்படியும் அவளுடைய ஆக்ஞைக்கு அடங்கியுமே நடந்து வந்தாள் என்றால் கேட்க வேண்டுமா? இந்தத் தள்ளாத வயதில் தன்னுடைய சொத்துக்களைப் பாதுகாத்துக் கெட்டிக்காரத்தனமாக நிர்வாகம் செய்யக் கூடிய நம்பிக்கையான பெண் ஒருத்தி கிடைத்ததைப் பெரிய அதிர்ஷ்டமாகக் கருதி வந்தாள் பார்வதி அம்மாள்.

அஞ்சுகம் அங்கு வந்தபோது முதன் முதலாக நிர்மலாவைத்தான் பார்க்க வேண்டியிருந்தது. அவன் ஜெயில் நிர்வாகி சரளாதேவியிடமிருந்து பார்வதி அம்மாளுக்குக் கடிதம் வாங்கிக் கொண்டு வந்திருப்பதைச் சொன்னான். நிர்மலா அந்தக் கடிதத்தைத் தன்னிடம் கொடுக்கும்படி சொல்லிக் கேட்டு வாங்கிப் படித்துவிட்டு, அஞ்சுகத்தை மேலும் கீழும் ஒரு தடவை பார்த்தாள். அந்தப் பார்வை அஞ்சுகத்திடம்



பெருத்த அனுதாபத்தையும் பச்சாத்தாபத்தையும் காட்டுவது போலிருந்தது. "உன்னைப் போன்ற பெண்களிடம்தான் எனக்கு அளவற்ற அனுதாபம் உண்டு. உன்னோடு நான் அதிகமாகப் பழகாவிட்டாலும் உன்னைப் பார்த்ததிலிருந்தே நீ ஒரு நல்ல பெண்

என்ற முடிவுக்கு வந்து விட்டேன். சரளா தேவியின் சிபார்சுக் கடிதம் இல்லாமலேயே நீ வந்திருந்தாலும் உன்னை நான் இந்த வீட்டில் வேலைக்கு வைத்துக் கொள்ள ஏற்பாடு செய்திருப்பேன். ஒரு விஷயம்: இந்த வீட்டு எஜமானிக்கு எடுத்ததற்கெல்லாம் கொஞ்சம் சந்தேகம் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். என்ன செய்வது? வயதாகி விட்டது. கண்ணும் கொஞ்சம் தெரியாது. உனக்கு வேலை கொடுப்பதைப் பற்றித் தடை இல்லை. இதைக் கொஞ்சம் நீ யோசித்துக் கொள்'' என்று கூறினாள்.

''உங்களைப் போன்றவர்கள் இங்கு இருக்கும்போது நான் ஏன் யோசிக்க வேண்டும்? உங்களை நம்பி வந்து விட்டேன். நான் சிறையிலிருந்து பட்ட கஷ்டம், அவமானங்களை விட எனக்கு வாழ்க்கையில் என்ன நேர்ந்துவிடப் போகிறது? ஆரம்பத்தில் அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டாலும் போகப் போக என்னோடு பழகியபின் அது தீர்ந்து விடாதா?'' என்றாள் அஞ்சுகம்.

''அம்மாவுக்கு வயதாகி விட்டதால் அப்படி இருக்குமென்று சொன்னேன். உன்னால் சமாளித்துக் கொண்டு போக முடியுமென்று சொன்னால் எனக்குச் சந்தோஷம்தான். சரி, வா. எஜமானி அம்மாளிடம் சொல்லுகிறேன்......'' என்று சொல்லி அவளை அழைத்துக் கொண்டு பார்வதி அம்மாளின் அறைக்குச் சென்றாள் நிர்மலா.

நிர்மலா பார்வதி அம்மாளிடம் அஞ்சுகத்தை அறிமுகம் செய்து வைத்து, அவள் சரளாவிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்திருக்கும் கடிதத்தையும் படித்துக் காட்டினாள். அஞ்சுகத்துக்குச் சமீபமாக வந்து இவளை ஒரு தடவை உற்றுப் பார்த்து விட்டு, ''சரளா சிபார்சு செய்து அனுப்பியிருந்தால் நல்ல பெண்ணாகத்தான் இருக்கும். இவளை இங்கு வேலைக்கு வைத்துக் கொள்ளலாமென்று நினைக்கிறேன். எனக்கு ஆட்சேபனை எதுவும் கிடையாது. நமக்கும் உதவிக்கு யாரேனும் வேண்டியதுதானே?'' என்றாள் பார்வதியம்மாள்.

''இவளை வேலைக்கு வைத்துக் கொள்வது என்று நான் முன்பே முடிவு செய்து விட்டேன்'' என்றாள் நிர்மலா.

அதற்கு மேல் பார்வதி ஒன்றும் சொல்ல வில்லை. அஞ்சுகத்திடம் அந்த வீட்டில் தினம் என்னென்ன வேலைகளைக் கவனிக்க வேண்டும் என்பதையெல்லாம் விளக்கிக் கூறினாள் நிர்மலா. எஜமானி அம்மாளின் புடவைகளைத் துவைப்பது, எஜமானி அம்மாளுக்குச் சாதம் போடுவது, குளிப்பாட்டுவது, தோட்டத்துக்குப் போவதென்றாலோ, மாடிக்குப் போவதென்றாலோ கையைப் பிடித்து ஜாக்கிரதையாக அழைத்துக் கொண்டு போவது, எஜமானி அம்மாள் கூப்பிட்ட போதெல்லாம் போய் அவளுக்குப் பணிவிடை செய்வது—இவைகள்தான் அஞ்சுகத்துக்கு ஒப்படைக்கப்பட்ட வேலைகள். இதற்குச் சாப்பாடு, உடைகள் கொடுத்து மாதம் பத்து ரூபாய் சம்பளம். இதற்குமேல் என்ன வேணும்? அஞ்சுகத்துக்குப் பரம சந்தோஷம். நிர்மலாவின் வசீகரமான முகம், இனிமையான பேச்சு எல்லாமே அவள் மனத்தைக் கவர்ந்தன. அவளுடைய அதிகாரத்தின் கீழ் வேலை செய்வதில் அவளுக்கு என்ன சிரமமும் கஷ்டமும் இருக்கப் போகின்றன?

நிர்மலா முதலில் எதிர்பார்த்ததை விட அஞ்சுகத்திடம் மிகப் பிரியமாகவும் அன்பாகவும் நடந்து கொண்டாள். அஞ்சுகம் தன் அதிகாரத்தின் கீழ் வேலை செய்கிறவள் என்ற போக்கில் அவளை நடத்தாமல் தன்னோடு மிகவும் பழகிய சிநேகிதி போலவே நடத்தி வந்

தாள். அந்த வீட்டில் எஜமானி அம்மாள் எப்படி இருந்தாலும் நிர்மலாவின் அன்புதான் அஞ்சுகத்துக்குச் சிறிது தைரியத்தையும் ஆறுதலையும் கொடுத்தது. நிர்மலாவின் இனிமையான பேச்சு, அழகான உருவம் எல்லாமே அஞ்சுகத்தின் மனத்தைக் கவர்ந்தன. அன்போடும் ஆர்வத்தோடும் பார்க்கும் நிர்மலாவின் கண்களில் மனத்தை மயக்கும் ஏதோ மாய சக்தி இருப்பதாகவே அஞ்சுகம் உணர்ந்தாள்.

அஞ்சுகம் ஏதோ யோசனையோடு உட்கார்ந்திருந்தாள். யாரோ அவள் தோள்மீது கைவைப்பது போல் தோன்றவே திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். நிர்மலா சிரித்துக்கொண்டே, ''என்ன தீவிரமாக யோசனை செய்துகொண்டு உட்கார்ந்திருக்கிறாய்....?'' என்றாள்.



அஞ்சுகம் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் தலை குனிந்த வண்ணம் மௌனமாக நின்றாள். அவள் முகத்தில் சோகம் தோய்ந்திருந்தது.

''அஞ்சுகம்! நீ ஏதோ கவலைப்பட்டுக்கொண்டே இருக்கிறாய். இந்த இடத்தில் உனக்கு என்ன குறை இருக்கிறது? மிகவும் சந்தோஷமாக இருக்கலாமே....?'' என்றாள்.

''எனக்கு ஒரு குறையும் இல்லையம்மா. இந்த இடம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. ஆனால் எஜமானி அம்மாளுக்கு என் மீது உள்ள சம்சயமும் சந்தேகமும் தீராது போலிருக்கிறதே. இப்படி இருந்தால் நான் எப்படி நிம்மதியாக வேலை செய்ய முடியும்? இதுதான் என் மனத்துக்குப் பெரிய கவலையாக இருக்கிறது'' என்று கூறினாள்.

நிர்மலா அவளுக்கு ஏற்பட்ட மனவிசாரத்தைத் தானும் பகிர்ந்து கொள்கிறவள் போல், ''எனக்கும் எஜமானி அம்மாளின் மனசு இப்படி இருக்கிறதே என்று விசாரமாய்த்தானிருக்கிறது. இதற்குக் காரணம் அவளுக்கு வயது ஆகிவிட்டது. அதனால் மனசும் கலக்கம் அடைந்திருக்கிறது. நீ ஜெயிலிலிருந்து வெளி வந்தவள் என்பதை எஜமானி அம்மாள் மறக்கமாட்டார்கள் போல் இருக்கிறது. நானும் அவர்கள் மனத்தை மாற்ற எவ்வளவோ பாடுபடுகிறேன். நான் அவர்களோடு தனியாகப் பேசும் போதெல்லாம் உன்னைப் பற்றி அவர்களுக்கு நல்ல அபிப்பிராயம் ஏற்படவேண்டுமென்று எவ்வளவோ சொல்கிறேன்....'' என்றாள்.

நிர்மலா அனுதாபத்தோடும் அன்போடும் கூறிய சமாதானத்தினால் அஞ்சுகத்தின் முகத்திலிருந்த துயரக் குறி சிறிது மறைந்தது. ''எஜமானி அம்மாளின் சந்தேகமும் சம்சயமும் இப்படி நீடித்துக் கொண்டே போனால் என் மனத்துக்கு நிம்மதியே ஏற்படாது. நான் இந்த வீட்டில் எப்படி இருக்க முடியும்? நீங்கள் மாத்திரம் என்னிடம் அன்பாக நடந்து கொண்டிருக்காவிட்டால் இத்தனை நாள் நான் இந்த வீட்டில் இருந்திருக்கவே மாட்டேன்..'' என்றாள். இந்தச் சமயத்தில் ''அஞ்சுகம்! அஞ்சுகம்!'' என்று எஜமானி அம்மாள் கூப்பிடும்குரல் கணீர் என்று கேட்டது. அஞ்சுகம் எழுந்து அவசரம் அவசரமாகச் சென்றாள்.

அஞ்சுகத்தின் தலை மறைந்ததும் நிர்மலா சுற்றிலும் ஒரு தடவை பார்த்தாள். அவ்வளவு நேரம் கருணையும் பச்சாத்தாபமுமே நிறைந்திருந்த அவளுடைய கண்களில் கபடமும் வஞ்சனையும் எப்படியோ வந்து நிறைந்தன. அவள் முகம் பயங்கரமாக மாறியது. ஒரு கணம் எதைப்பற்றியோ தீவிரமாகச் சிந்தித்தாள். அடுத்த கணம் ஏதோ ஒரு முடிவுக்கு வந்து விட்டவள்போல் அங்குமிங்கும் பார்த்தாள். அவள் முகத்தில் முன் இருந்த பயங்கரம் சிறிது மாறியிருந்தாலும் ஏதோ சதிசெய்யப் போகிறாள் என்பது திட்டமாகத் தெரிந்துவிட்டது. அஞ்சுகம் சென்ற திக்கைச் சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு எழுந்து சென்று அஞ்சுகம் திரும்பி வருகிறாளா, இல்லை எஜமானி அம்மாளுக்கு உதவி செய்யும் காரியத்தில் ஈடுபட்டிருக்கிறாளா என்பதைப்



சென்னை தியாகராய நகரிலுள்ள சாரதா வித்யாலய ஆதாரக் கல்விப் பயிற்சிப் பள்ளியின் புதுக் கட்டடத்தைச் சென்ற 15-ம் தேதி மாலை ஸ்ரீ வி.டி. கிருஷ்ணமாச்சாரியார் திறந்துவைத்தார். கல்வி மந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமண்யம் மேற்படி வைபவத்தில் கலந்து கொண்டார். இப்பள்ளி குறுகிய காலத்தில் இவ்வளவு சிறப்பு எய்தியதற்குக் காரணமாக விளங்கிய சகோதரி சுப்புலட்சுமி அம்மையாரையும், திறப்பு விழாவில் பங்கு எடுத்துக் கொண்ட தலைவர்களையும், விழாவுக்கு வந்திருந்த சபையோர்களையும் மேலே படத்தில் காணலாம்.

பார்த்துத் தெரிந்துகொண்டு திரும்பி வந்தாள். தன் சிவந்த உதட்டைக் கடித்துக் கொண்டு ஒரு பெருமூச்சு விட்டு விட்டுச் சட்டென்று தன் மடியிலிருந்து எதையோ எடுத்து அங்கு அஞ்சுகம் வைத்திருக்கும் சிறு துணி மூட்டைக்குள் வைத்தாள். சட்டென்று தன் அறைக்கு வந்து அமைதியாக அமர்ந்து, கணக்குப் புத்தகங்களை யெல்லாம் புரட்டிக் கொண்டிருந்தாள்.

அஞ்சுகம் அந்த வீட்டுக்கு வந்து ஐந்தாறு நாட்கள் ஓடி விட்டன. ஆனால் அவளுக்கு அந்த வீட்டுக்கு வந்தபோது இருந்த சந்தோஷமும், மன நிம்மதியும் இப்பொழுது இல்லை. அந்த வீட்டில் ஓயாது உழைப்பதில் அவளுக்கு அலுப்போ, வெறுப்போ ஏற்படவில்லை. முகம் சுளுங்காமல் எந்த வேலையையும் ஏற்றுச் செய்தாள். ஆனால் எஜமானி அம்மாளின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவளாக அவள் ஆக முடியவில்லை என்பதை உணர்ந்தபோதுதான் அவள் மனம் உறுத்தியது. எடுத்ததற்கெல்லாம் எஜமானி அம்மாள் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்ததுதான் அவளுக்கு மிகவும் மனவேதனை அளித்தது. இரண்டு மூன்றுதடவைகள் 'படுக்கைக்கு அடியில் இருந்த பணத்தைக் காணவில்லை' என்றும் 'அலமாரியில் வைத்திருந்த பணத்தைக் காணவில்லை' என்றும் 'அதுவரையில் அந்த வீட்டில் திருட்டே நடந்ததில்லை' என்றும் 'அஞ்சுகம் அந்த வீட்டுக்கு வேலைக்கு வந்த பிறகு தான் இவைகளெல்லாம் ஏற்படுவதாக' வும் எஜமானி அம்மாள் அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தாள். இது அஞ்சுகத்துக்கு எப்படி இருக்கும்? அந்த வார்த்தைகள் ஒவ்வொன்றும் 'சுரீர்' 'சுரீர்' என்று அவள் இதயத்தைக் குத்திப் புண் படுத்திவிட்டன. அவளுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. தவியாய்த் தவித்தாள்.

வஞ்சகம் நிறைந்த உலகில் ஒருபெண் அனாதையாக இருக்கும்படி நேர்ந்து விட்டால் எவ்வளவு கொடுமைக் கெல்லாம் ஆளாகவேண்டி யிருக்கிறது என்பதை நினைத்தாள். அவளையும் அறியாமல் கொடி போன்ற அவள் உடல் 'கிடு' 'கிடு' என்று ஆடி நடுங்கியது. அவள் சிந்தனை ஒரு நிலைக்கு வந்ததும் குப்பம்மாள் அனுபவ பூர்வமாகச் சொன்ன வார்த்தைகளும், சொக்கன் எச்சரிக்கை செய்து அனுப்பியதும் அவள் ஞாபகத்துக்கு வந்தன. 'ஒரு தடவை திருட்டுக் குற்றத்துக்காகச் சிறைவாசம் சென்று வந்தவள் மறுபடியும் உலகத்தில் நல்ல பெயர் எடுத்து நம்பிக்கைக்குப் பாத்திரமாக வாழ்வது கடினம்தான்' என்பதை அப்பொழுது தான் அவள் உணர முடிந்தது. உண்மையாகவே எஜமானி அம்மாள் சொல்கிறபடி பணம் களவு போய்விட்டதா என்பது அவளுக்குத் தெரியாது. வயதானதின் காரணமாக ஏற்பட்டுள்ள தடுமாற்றம், சரியானபடி கண் தெரியாததின் தோஷம், ஞாபக மறதி இவைகளின் காரணமாகவும் இருக்கலாம் அல்லவா? எஜமானி அம்மாளின் குணத்தைப் பற்றி ஆரம்பத்திலேயேதான் நிர்மலா சொல்லி விட்டாளே? அதை எண்ணி, போகப் போக எல்லாம் சரியாகிவிடும் என்று அஞ்சுகம் சமாதானம் செய்து கொண்டாள். (தொடரும்)

தேவியின் கடிதம்

# தாம்பத்திய ஒற்றுமை

வஸுமதி ராமசாமி

அன்பு மிக்க சகோதரி சுஜாதா,

தாம்பத்தியத்தில் ஒரேமாதிரி அன்பும் ஒற்றுமையும் இல்லையே, ஒவ்வொரு காலத்தில் ஒரு புது மாதிரி சிக்கல் வருகிறதே யென்று நீ கேட்டிருக்கிறாய்.

உண்மைதான். தாம்பத்திய கால வயதை மூன்று பருவங்களாகப் பிரிக்கலாம். கல்யாணம் ஆன புதிதில் தாம்பத்தியத்தின் அன்பில் அவ்வளவு சிரமமில்லை. இளம் வயதின் இன்ப நினைவுகள், கவர்ச்சிகரமான தோற்றம், பேச்சு, இப்படி யெல்லாம் அழகான சூழ்நிலை. அந்தச் சமயம் ஊடல் ஏற்படுவதெல்லாம் பரஸ்பரம் அன்பு வார்த்தைகள் போதாத காரணம். ஒருவன் கல்யாணம் செய்து கொண்டு தன் மனைவியுடன் ரயில் பிரயாணம் செய்யப் புறப்பட்டானாம். வழக்கம் போல் ஒரு டிக்கட் மட்டும் வாங்கி இருக்கிறான். மனைவி ''அதற்குள்ளாகவா என்னை மறந்து விட்டீர்கள்?'' என்று கேட்டிருக்கிறாள். அவன் ''நன்றாகச் சொன்னாய். உன் நினைவில் என்னையே மறந்துவிட்டு உனக்கு மட்டும் ஒரு டிக்கெட் வாங்கி யிருக்கிறேன்'' என்று பதில் சொல்லித் தப்பித்துக் கொண்டானாம். விஷயம் சிறியதுதான். அந்தப் பெண்ணுக்கு இவனுடைய தவறை அறியும் சக்தியில்லை. வாழ்வின் அதிகாலை, எல்லாமே புதுமை. அனைத்தும் பசுமை. தனக்கு அப்பால் ஒரு உலகம் சுழல்கின்றது என்ற எண்ணமே இல்லாத மோன நிலை. எனவே அந்த நிலையில் சிக்கல் வருவதில்லை.

நடுவயதில்தான் மிகுந்த கஷ்டங்கள் வருகின்றன. வளரும் குழந்தைகள், குடும்பத்தை நிர்வகிக்கும் பொறுப்பு, பிறந்த வீடு, புருஷன் வீடு - இரண்டுக்கும் நடுவிலுள்ள அபிப்பிராய பேதங்கள், பண வருவாயின் ஒத்துழையாமை, செலவினங்களின் சீற்றம், இப்படிப் பலவிதமான போராட்டங்களுக்கு இடையே ஒரு பெண் தன்னுடைய நிலையைக் கௌரவமாகக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியிருக்கிறது. அப்பொழுதெல்லாம் பெண்களுக்கு உற்ற தோழி பொறுமை தான். அதற்காக மக்களுக்கும், மற்றவர்களுக்கும் செய்ய வேண்டிய கடமைகளை விட்டுப் பொறுமையாக இருக்க வேண்டுமா? அது மடமையாய் விடுமல்லவா? ஒருவரையும் அதிகாரத்தில் வெல்ல முடியாது. அன்பால் வென்று விடலாம்.



ஒரு கல்யாண விஷயம் பேச ஒருவர் வீட்டுக்கு என் சிநேகிதியுடன் போயிருந்தேன். பிள்ளையின் தகப்பனார் அப்பாவியாக இருந்தார். நாங்கள் சீர் வரிசைகளைப் பற்றிப் பேசும்போதெல்லாம் அவர் மனைவியின் முகத்தைப் பார்த்துக் கொண்டே பட்டியலை ஏற்றிச் சொன்னார். அந்தம்மாள் தம்முடைய கண்களின் வீச்சிலேயே கட்டளைகள் பிறப்பித்துக் கொண்டிருந்தார். வெளியில் வந்தபிறகு, அவர் ''என் மனைவி அதிகப்படியாகக் கேட்கிறாள். என்ன செய்வது, ஏதோ முன்னே பின்னே அவள் மனம் கோணாமல் செய்து விடுங்கள்'' என்று பணிவாகச் சொன்னார்.

அந்தம்மாள் தமக்குப் பிள்ளை பிறப்பதற்கு முந்தியே பட்டியல் தயார் செய்து விட்டார் போலும். துரதிர்ஷ்டவசமாகக் கணவன் மனைவியிடம் பயப்பட்டு நடந்தாலும் மனத்தின் அடியில் கசப்பு இருக்கத்தான் செய்யும் என்பதை நினைத்து வியந்தேன். அது தேவையில்லை. காரியங்களைச் சரிவர நடத்த, நமக்கு நடத்திக் கொடுக்க இருவருக்கு மிடையே அன்பு ஒன்று போதும். எந்தத் துஷ்ட சுபாவமுள்ள புருஷனும் மனைவியிடம் அன்பு செய்யாமல் இருக்க மாட்டான். எனவே நம்முடைய நிலையில் கஷ்டம் வராது.

பொதுவாகத் தங்களுடைய அம்மாவும், அப்பாவும் சண்டையிட்டுக் கொள்வதை எந்தக் குழந்தைகளும் விரும்புவதில்லை.

அப்படி நேர்ந்தால் வயது ஏற ஏறக் கட்சி பேதங்கள் வீட்டில் புகுந்து விடுகின்றன. சகிப்புத் தன்மை, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை இவைகளும் நாம் வளருவதுபோல் வளர்ந்து கொண்டு வந்தால்தான் தாம்பத்தியம் பூர்த்தியாகும். உண்மையான அன்புள்ள தம்பதிகளை உலகம் வரவேற்கிறது.

சென்ற வாரம் ஒரு சஷ்டிஅப்த பூர்த்தி கல்யாணத்துக்குப் போயிருந்தேன். தம்பதிகள் மணப் பந்தலில் உட்கார்ந்திருந்தார்கள். இந்தக் காலத்து இளம் வயதுக்கல்யாண தம்பதிகளும் மணப் பந்தலில் உட்கார்ந்திருந்தனர். அவர்கள் எவ்வளவோ ஜன்மங்களாகத் தெரிந்து பழகின மாதிரி பேசிச் சிரித்தார்கள்! அது போலவே சஷ்டியப்த பூர்த்தி செய்து கொள்ளும் இந்தக் கல்யாண அம்மாளும் புன்சிரிப்புடன் பேசிக் கொண்டுதான் இருந்தார். ஆனால் இரண்டு வித தம்பதிகளுக்கிடையே அளவற்ற வித்தியாசம். கடமைகளைக் குறைவின்றி ஆற்றிய பெருமிதம் இந்தம்மாள் முகபாவத்தில் இருந்தது, சுஜாதா!

அறுபது வயதானாலும் தாம்பத்தியத்தின் சுவை குன்றாமல் வாழ்வதற்கு முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது, கடமை தவறாமல் கணவனுக்குப் பணியாற்ற வேண்டியதுதான். அதில்தான் தாம்பத்தியத்தின் ரகசியமே அடங்கிக் கிடக்கிறது. இப்படிக்கு,

பூமாதேவி


சாதாரண கணக்கு
அழகு + சிக்கனம் = கோ-ஆப்டெக்ஸ்
ஒரு கோ-ஆப்டெக்ஸ் சேலையை எவ்வளவு அழகாக அணிந்து கொள்ள முடியும் என்பதை இரண்டு ஓவியர்கள் மிக அழகாக சித்தரித்து காட்டியுள்ளார்கள். ஆனால் நீங்கள் இங்கு காண்பது, நேரில் காண்பதின் சாயை கூட இல்லை. கோ ஆப்டெக்ஸ் சேலைகள் உங்களுக்கே தயார் செய்தது போல். அவ்வளவு பொருத்தமாக இருக்கும். எச்சமயத்திலும், எங்கு வேண்டுமானாலும், அணிந்து கொள்ளலாம். நிச்சயமாக அவைகள் உங்களை தனியாக எடுத்துக் காட்டும். பார்த்துப் பொறுக்கி எடுத்துக் கொள்ள நூற்றுக் கணக்கான திணுசுகள் உள்ளன. அதற்கு நீங்கள் கொடுக்கும் விலை, உங்கள் நண்பர்கள் போடும் மதிப்பைவிட, மிகக் குறைவாக இருப்பதைக் காண்பீர்கள்.
இது உண்மையிலேயே மிக சுலபமான கணக்கு
அழகு + சிக்கனம்
=
கோ-ஆப்டெக்ஸ்
ஆடைகள்
சென்னை ராஜ்ய கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம் லிமிடெட்,
34/1A பாந்தியன் ரோடு, மதருஸ் - 8.



# நான் கண்ட

## வினோபாஜி

நமது தேசத்தின்மீது ஈசுவரனுக்கு எப்போதுமே பேரருள் இருந்திருக்கிறது. அதனலேயே எண்ணற்ற உத்தம புருஷர்களை இந்தப் பாரத தேசத்துக்கு அவர் அனுப்பி வந்திருக்கிறார். ஒருவர் பின் ஒருவராக அவர்கள் மக்களைத் தட்டி எழுப்பி விட்டுச் சென்றிருக்கிறார்கள். ஒருவர் தோன்றி மறையும்போது அவரைத் தொடர்ந்து இன்னொரு மகாபுருஷர் உதயமாவார்.

இவ்வாறு ஸத் புருஷர்களும் தேசபக்தர்களும் தொடர்ந்து தோன்றி வருவது என்ற நிலை பாரதத்தில் தொன்று தொட்டே இருந்து வந்திருக்கிறது. அந்தப் பரம்பரையில் தோன்றிய மகாபுருஷர் லோகமான்ய பாலகங்காதர திலகர். அவருடைய நூறுவது ஜெயந்தி தினம் கொண்டாடுகிறோம்.

காந்தி மகாத்மாவுக்கு முன்னால் நமது பாரத நாட்டு மக்களைத் தட்டி எழுப்பி அவர்கள் கடமை என்ன என்பதை உணர்த்தியவர் லோகமான்ய திலகரே. அவர் வாழ்நாள் முழுதும் நமது நாட்டின் விடுதலைப் போராட்டத்திலேயே கழிந்தது.

அவர் வாழ்நாளில் பாரத நாட்டுக்குச் சுதந்திரம் கிடைக்கவில்லை. அவருடைய மறைவுக்குப் பின்னால் தான் தேசம் சுதந்திரம் பெற்றது. ஆனல், அவர் தம் கடைசி மூச்சு உள்ள வரை பாரத நாட்டின் சுதந்திரத்துக்காகப் பாடுபட்டு வந்தார் என்பது அவருடைய பாக்கியம் என்றே கருத வேண்டும்.

மரணத்தறுவாயில்கூட, ''யதாயதாஹிதர்மஸ்ய'' என்று பகவான் கீதையில் கூறிய மொழிகளை உச்சரித்தபடியே அவர் உயிர் நீத்தார்.

அதர்மம் ஓங்கும்போது பகவான் அவதாரம் செய்கிறார் என்பதுதான் அந்த சுலோகத்தின் பொருள். இதை லோகமான்யர் பரிபூரணமாக நம்பினர்.

இந்தியாவுக்கு நல்வாழ்வை அளிக்கும் வண்ணம் கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டு திலகர் இவ்வுலகை விட்டு மறைந்தார்.

திலகர் கீதையின் ரகசியத்தை மிகத் தெளிவாக எல்லோருக்கும் விளங்கும் வண்ணம் எழுதியிருக்கிறார். 'கீதாரகசியம்' என்று அவர் எழுதிய நூல் மிகப் பிரசித்தி பெற்றது. ஆனல் அதைக் காட்டிலும் அவர் வாழ்க்கைக்கே நான் அதிக மதிப்பு கொடுக்கிறேன்.

கீதையின் ரகசியத்துக்கு ஒரு முடிவே இல்லை. ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொரு காலத்திலும் புதுப் புதுப் பொருள்கள் அதில் கிடைக்கும். ஆனல் கீதையிலிருந்து எப்பொருளைத் திலகர் கண்டாரோ அதே முறையிலேயே தமது வாழ்க்கையை நடத்தினர். அரசியல் பணியிலேயே அவர் வாழ்க்கை கழிந்தது. அதை அவர் ஒரு தர்ம காரியமாகவே மதித்தார். அரசியலுக்குத் தனிப்பட்ட ஒரு பெருமையை அவர் கொடுக்கவில்லை.

நாடு அடிமையாக இருந்தது. இந்த அடிமைத் தளையிலிருந்து நாட்டை விடுவிப்பதுதான் தர்ம காரியம் என்று எண்ணி அதில் பரிபூரணமாக ஈடுபட்டார்.

''சுதந்திரம் கிடைத்த பிறகு எந்த மந்திரிப் பதவியைத் தாங்கள் விரும்புவீர்கள்?'' என்று கேட்டதற்கு லோகமான்யர் என்ன பதில் சொன்னர் தெரியுமா?

''சுதந்திரம் கிடைத்த பிறகு வேதங்களை ஆராய்வதிலோ, கணிதத்தைப் பரிசீலிப்பதிலோ ஈடுபடப் போகிறேன்'' என்றார்.

இவ்வாறு அவர் உள்ளத்தில் எப்போதும் தார்மீக சிந்தனையே நிறைந்திருந்தது.

அவர் பல நூல்களை மராட்டி பாஷையில் எழுதி யிருக்கிறார். ஆங்கிலத்திலும் அற்புதமாக எழுதி யிருக்கிறார். ஆனல் அவர் கீதையின் ரகசியத்தை எப்படி எளிமையாக விளக்கி எழுதினரோ அதற்கேற்ப வாழ்ந்த வாழ்க்கைதான் மிகவும் முக்கியமானதாகும்.

அவர் பாரத நாட்டைச் சேர்ந்தவர். பாரதம் முழுவதற்கும் தொண்டு புரிந்தார். அவர் குறுகிய அரசியலை நம்பியதே கிடையாது. பரந்த மனப்பான்மையையும், மனிதத் தன்மையையுமே நம்பி வாழ்ந்தார். பாரத நாடு அடிமைத் தளையிலிருந்து சுதந்திரம் அடையாத வரையில் மனிதத்தன்மையுடன் ஒரு காரியமும் செய்ய முடியாது என்று அறிந்தே அரசியலை ஏற்று நிர்வகித்தார்.

அவருடைய அச்சமற்ற தன்மையை அனைவரும் அறிவார்கள். எதற்காகப் பயப்பட வேண்டும்? ஏன் பயப்படவேண்டும்? ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்து காரியம் செய்யும் புத்தி பெற்றவர்கள் துன்பத்தைக் கண்டு கலங்குவதில்லை. அவருக்குப் பிறகு நூற்றுக் கணக்கானவர்கள் நமது தேசத்தின் விடுதலைக்காகச் சிறைக்குச் சென்றிருக்கிறார்கள். இப்போது சிறை வாழ்க்கை பயமற்றதாகிச் சுலபமாக அமைந்து விட்டது.

ஆனல், அவருடைய காலத்தில் சிறை வாழ்க்கை அவ்வளவு சுலபமானதல்ல; மிகவும் கஷ்டமாக இருந்தது. ஆறு, ஆறு வருஷத் தண்டனை அவருக்கு விதிக்கப்பட்டது. அந்தச் சிறைவாசத்தில் அவர் படிப்பதிலும் சிந்திப்பதிலும் பொழுதைக் கழித்தார். அவருடைய

# திலகர்



அச்சமற்ற குணமானது ஆத்மீகத் துறையில் ஈடுபட்டிருந்தகாரணத்தால் ஏற்பட்டது. தம்மை அவர் அத்வைத வாதி என்று கருதினார். ஆகையால், '' ஒரு தேசம் '' என்ற குறுகிய மனப் பான்மையே அவர் மனத்தில் இருக்க வில்லை. அவர் பாரத நாட்டுக்காக இடைவிடாமல் உழைத்தார். பாரதத்தி னிடம் அளவிலாத அன்பு கொண்டிருந் தார். இருந்தாலும் பாரதத்தின் மூல மாக உலக முழுவதுக்கும் சேவை செய்ய வேண்டும் என்று கருதினார்.

சத்யாக்கிரகம் என்ற வார்த்தை திலகருக்குப் பிறகுதான் ஏற்பட்டது. இதைப்பற்றிய இலக்கணமும் அவர் மறைவுக் குப் பின்தான் நிர்ணயிக்கப்பட்டது. இந்த சாஸ்திரத்தைப் பற்றிய பாடத்தை நமக்குக் காந்திஜி கற்றுக் கொடுத்தார்.

காந்தி மகாத்மா இந்தியாவுக்கு வருவதற்கு முன்னாலேயே லோகமான்ய திலகரின் செய வானது குற்றமற்ற சத்தியாக்கிரக வழியி லேயே அமைந்திருந்தது.

லோகமான்யருக்கு நீதிமன்றத்தில் ஆறு வருஷம் தண்டனை விதிக்கப்பட்டது. இந்தத் தீர்ப்புக்குப் பிறகு திலகருக்குச் சில வார்த் தைகள் பேச அனுமதி அளிக்கப் பட்டது.

''இந்த நீதிமன்றத்துக்கு மேலே பெரிய நீதி மன்றம் இருக்கிறது. அதை நான் ஈசுவரன் என்று சொல்லுகிறேன். என்னுடைய காரி யம், எனக்கு ஏற்பட்டுள்ள கஷ்டங்களைப் பொறுத்துக் கொள்வதனால்தான் முடியும் என்று ஆண்டவன் கருதினால் மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொள்ளுகிறேன்'' என்றார் திலகர்.

இந்த நம்பிக்கையைத் தான் சத்தியாக் கிரகம் என்று சொல்லுகிறோம். சத்தியத்தை நிலைநாட்ட வேண்டும் என்றால், கஷ்டத்தை அன்போடும் அமைதியோடும் பொறுத்துக் கொள்ள வேண்டும். இதுதான் உண்மை யான சத்தியாக்கிரகம் ஆகும்.

திலகருக்குத் தண்டனை கொடுக்கப் பட்ட போது, இரவு நெருங்கி விட்டது. மோட்டா ரில் உட்காரவைத்துச் சிறைக்கு அழைத்துச் சென்றார்கள். அப்போது என்ன நேர்ந்தது? போலீஸ் அதிகாரி அவரைக் கூட்டிக்கொண்டு போனபோது என்ன நடந்தது? இரவு தூங்கும் நேரம் வந்தவுடனே, திலகர் அயர்ந்து தூங்கிக் கொண் டிருந்ததைப் போலீஸ் அதிகாரி பார்த்தார்!

திலகருக்கு ஆறு வருஷம் கடும் காவல் தண்டனை விதிக்கப் பட்டிருந்தது. கடும் காவல் வெறும் காவலாக மாறிற்று. கார ணம் அவர் கிழவராக இருந்தார் என்பதுதான்.

அந்தக் காலத்தில் இவ்வளவு நீண்டகால தண்டனை விதிக்கும் பழக்கமே இருக்கவில்லை. ஆகவே திலகருக்கு ஆறு வருஷ கடும் காவல் தண்டனை விதிக்கப்பட்டதும் எல்லாரும் வருத்தத்தில் ஆழ்ந்திருந்தார்கள். ஆனால் திலகரோ நிம்மதியாகத் தூங்கிக் கொண் டிருந்தார். பற்றற்ற நிலை என்று ஒன்று அவர் உள்ளத்தில் இல்லை என்றால் அவரால் நிம்மதி யாகத் தூங்க முடியுமா?

சாத்வீகமாகக் காரியம் செய்பவன் எப்படி யிருப்பான் என்று கீதையில் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

அவன் உற்சாகமாகவே வேலை செய்வான். ஒருபோதும் தைரியத்தைவிட மாட்டான். பலனைப் பற்றிக் கவலை இருக்காது. 'நான் செய்கிறேன்' என்ற ஆணவம் இராது.

** ** **

லோகமான்ய திலகர் மகாராஷ்டிரத்தில் பிறந்தார். அவருடைய காரியங்கள் மகா ராஷ்டிரத்தோடு நிற்கவில்லை. பாரத தேசத் துடனும் நின்றுவிடவில்லை. உலகம் முழுவதற் குமே வியாபித்து நின்றது.

அவர் கீதா ரகசியம் என்ற தமது ஒப்பற்ற நூலை மக்களுக்குச் சமர்ப்பணம் செய்திருக் கிறார். மக்கள் எல்லோரும் ஆண்டவனின் உருவமே என்று கருதித் தமது புத்தகத்தைச் சமர்ப்பித்திருக்கிறார். பெரும் கஷ்டம் வந்த காலத்திலும் இமயமலை போல் நின்றார்.

சுதேசிப் பொருள்களை மிகவும் விரும்பினார். நாட்டுக் கைத்தொழில்களை வளர்க்க வேண்டும் என்று வற்புறுத்தினார். தேசியக் கல்விக்கு அவரே ஆசார்ய புருஷராக விளங் கினார். தாய் பாஷையில் பற்றுக் கொண்டிருந் தார். ஹிந்தி பாஷைக்கு உயர்ந்த இடத்தை வழங்கினார். தமது 'கேஸரி' என்ற மராத்தி பத்திரிகையில் ஹிந்திக்காக ஒரு சில பக்கங் களைத் தனியாக ஒதுக்கி எழுதி வந்தார். வெள்ளைக்காரர்களோடு போராடிக் கொண் டிருந்த போதும், ஆங்கில பாஷையை விரும்பி னார். அதிலுள்ள உயர்ந்த செல்வத்தை நம தாக்கிக் கொள்ள வேண்டும் என்று எண்ணி னார். அவர்தான் பொது மக்களுடன் ஒன்றி நின்ற முதல் தலைவர். அவர் வாலிபருடன் பேசினாலும் வயோதிகருடன் பேசினாலும் தோழராக நின்று பேசுவார். சிநேகிதன் போல் பேசுவார். யாரும் அவருக்குச் சமம்.

அவர் மனத்தில் அகங்காரம் என்பதே கிடையாது. அவருக்கு அபிமானம் இருந்தது என்றால் அது மக்களிடம்தான் இருந்தது.



இப்படிப்பட்ட மகானின் நாளை நாம் எப்படிக் கொண்டாட வேண்டும்? சுயராஜ்யம் கிடைத்த பிறகு நம் கடமை முழுவதும் செய்யவில்லை. எந்த ஏழை மக்களுக்காக திலகரும் காந்திஜியும் உழைத்தார்களோ அந்த மக்களின் வறுமை ஒழியப் பாடுபட வேண்டும். உயர்வு — தாழ்வு என்ற வித்தியாசங்களை ஒழிக்க முயல வேண்டும்.

இதையெல்லாம் செய்தால்தான் உண்மை சுயராஜ்யம் கிடைத்ததாகும். லோகமான்யரின் கனவும் நனவாகும்.

பூதான இயக்கங்கூட அவர் ஆசீர்வாதத்தினால் அவர் காட்டிய பாதையில் நடக்கிறது என்று கருதுகிறேன்.

என் குழந்தைப் பருவத்து நாட்கள் நினைவுக்கு வருகின்றன. வாரத்தில் எந்தக் கிழமை கேஸரி பத்திரிகை வரப்போகிறது? எப்போது படிக்கப் போகிறேன் என்று ஆவலோடு எதிர் பார்த்திருக்கிறேன். இவ்வாறு திலகர் மராத்தி பாஷைக்கு அதிக சேவை செய்திருக்கிறார். அவருடைய ஒப்பற்ற சேவையின் காரணமாகவே மராத்தி பாஷை புதிய ஒளியும் பெருமையும் பெற்றிருக்கிறது.

தேசத்துக்குப் பலவிதங்களில் பணி புரிந்த லோகமான்ய திலகருக்கு நாம் எவ்வளவோ நன்றிக்கடன் பட்டிருக்கிறோம்.

பௌர்ணமியன்று அஸ்தமித்தவுடனேயே பூரண சந்திரன் உதிக்கிறானே, அம்மாதிரி திலகர் மறைந்ததும் காந்தி மகான் அரசியல் அரங்கில் தோன்றினார்.

இம்மாதிரி ஆண்டவன் நமக்குப் பெருபகாரம் செய்திருக்கிறார். அந்த உபகாரத்துக்குத் தகுதியுள்ளவர்களாக நாம் நடக்க வேண்டும் என்பதுதான் நமது பிரார்த்தனை!

# வட்ட மேஜை

## கல்வி இலாகா கவனிக்குமா?

நெல்லை ஜில்லா போர்டு ஆதரவில் நடந்து வருகிற உயர்தரப் பாடசாலைகள், ஆரம்பப் பாடசாலைகள் முதலியவற்றில் பையன்களுக்குப் புத்தகம், நோட்டுகள் விநியோகம் செய்யப்படவில்லை. ஜில்லா போர்டிலிருந்துதான் புத்தகம், நோட்டு முதலியவைகள் விநியோகம் செய்வார்கள். அவற்றை வாங்க வேண்டுமென்று சொல்லிப் பணத்தையும் வசூல் செய்ததாகத் தெரிகிறது. பள்ளிக்கூடங்கள் திறந்து ஒன்றரை மாதத்துக்கு மேலாகிறது. மாணவர்களும் பள்ளிக்குச் சென்று யாதொரு பாடமும் நடக்காமல் மாலையில் வீடு திரும்புகிறார்கள். தனிப்பட்டவர்கள் நடத்தும் பள்ளிகளில் புத்தகங்கள் வாங்கி ஒழுங்காகப் பாடம் நடக்கிறது. நெல்லை ஜில்லா போர்டு ஆதரவில் நடக்கும் பள்ளிகளிலோ குழந்தைகள் கவலையற்றுப் படிக்காமல் தூங்குகிறார்கள். கல்வி அதிகாரிகள் உடனே கவனித்துப் புத்தகங்கள் கிடைக்கச் செய்வார்களா?

தென்காசி
17—7—56

எஸ். ராமசாமி

## அமெரிக்காவில் "கல்கி"

நான் சென்ற இரண்டரை வருஷங்களாகக் 'கல்கி'யை நன்றாகப் படித்து மகிழ்ந்தேன். அமெரிக்காவில், தமிழ்ப் பத்திரிகை என்பது கிடைப்பதே கிடையாது. அந்த இடத்தில் 'கல்கி' நான்கு குடும்பங்களுக்கு மிக்க மகிழ்ச்சியைக் கொடுத்ததல்லாமல், உற்ற தோழியாகவும் இருந்தது. தமிழ் நாட்டை விட்டு எவ்வளவு தூரதேசம் போனாலும் நம் மொழி; நம் பத்திரிகையைத்தான் முதலில் தேடவேண்டியிருக்கிறது. 'கல்கி' பத்திரிகையைப் பார்த்து அமெரிக்கர்கள் வியந்து போனார்கள். தமிழ் எழுத்தைப் பார்த்து, "இது என்ன அரபி எழுத்தா?" என்று கேட்கிறார்கள். நான் எங்குபோனாலும், 'கல்கி'யை எடுத்துக் கொண்டே போவேன். எல்லோருக்கும் "இது இந்திய பாஷைகளில் ஒன்று" என்று சொல்வேன். 'கல்கி'யிலிருக்கும் விதம் விதமான சித்திரங்களைப் பார்த்து, அமெரிக்கர்கள் மிகவும் மகிழ்ந்தார்கள்.

அமெரிக்கா உலகிலேயே மிகப் பெரிய பணக்கார தேசமானாலும், நம் ஊரில் இருக்கத்தான் எனக்குப் பிடிக்கிறது. அமெரிக்காவில் உணவு, உடை எல்லாச் சாமான்களுமே மிக அதிக மாகத்தான் இருக்கின்றன. இருந்தாலும் நம் ஊரைப் போல் உலகில் வேறு எங்குமே சுகம் இருக்கவில்லை என்பது என் மனமார்ந்த அபிப்பிராயம். நானும் மற்ற மூன்று தமிழ்க் குடும்பங்களும், 'கல்கி'யைப் படித்து மகிழ்ந்தோம் என்பதை மிகுந்த மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

வாஷிங்டன்-அமெரிக்கா
11—7—56

வி. கே. கல்பகம்

## அரசாங்கம் ஆவன செய்யுமா?

அரசாங்கத்தார், ஜில்லா போர்டு, மானேஜ்மெண்ட் முதலிய உயர்நிலைப் பள்ளிகளிலும், எலிமெண்டரி பள்ளிகளிலும் ஆசிரியர்கள் தொண்டாற்றும் வயதை அறுபது என்று நிர்ணயித்துச் செயலாற்றி வருகிறார்கள். அப்படியிருந்தும் ஓய்வு பெற்றுக் கொள்ளும் ஆசிரியர்கள் சில காரணங்களைக் காட்டியதனால் அறுபத்தோராவது வயதிலும் வேலை செய்யச் சலுகை அளித்திருக்கிறார்கள். அறுபத்தோராவது வயது முடிந்தும் ஓய்வெடுத்துக் கொள்ளாமல் அறுபத்திரண்டாம் வயதுக்கும் பணியாற்றச் சலுகை கோரிச் சில ஆசிரியர்கள் விடாமல் அட்டைபோல் ஒட்டிக் கொண்டு மனுக்கள் மூலம் அரசாங்கத்திடம் வேண்டிக் கொண்டிருக்கிறார்கள். இம்மாதிரி ஒவ்வொரு வருஷமும் அவர்களுக்கு வேலை நீடித்துக் கொண்டு போனால் என் போன்ற வருங்கால ஏழை வாலிப ஆசிரியர்கள் என்ன செய்வதென்று தெரியவில்லை.

மதுரை
18—7—56

கோவிந்தராஜன்

# இசைக் கலைஞர் ஞாபகம்

**ப**ல ஆண்டுகளுக்கு முன்னால் புதுக்கோட்டையில் ஒரு சங்கீத வித்வானுடைய இல்லத்தில் மிருதங்கத்துக்கும் கஞ்சிராவுக்கும் பின்வரும் சம்பாஷணை நடந்தது.

'மிருதங்கம் உயர்ந்ததா? கஞ்சிரா உயர்ந்ததா?' என்பதே அந்தச் சந்தேகம்.

கஞ்சிரா மிருதங்கத்தினிடமே அந்தச் சந்தேகத்தைக் கேட்டது.

"இதில் உனக்கென்ன சந்தேகம்? நான்தான் உயர்ந்தவன். எனக்கு இணை யார்?" என்றது மிருதங்கம்.

"நான்தான் உயர்ந்தவன்; என்னுடைய நாதத்தில் உள்ள குளுகுளுப்பும் ஜிலுஜிலுப்பும் வேறு யாருக்கு உண்டு?" என்று பெருமைப் பட்டது கஞ்சிரா.

"இடையிலே இடையாது. நான்தான் உயர்ந்தவன்" என்று ஒரே போடாகப் போட்டு முத்தாய்ப்பு வைத்தது மிருதங்கம்.

இந்தச் சமயம் கும்பகோணத்துப் பிடில் ஒன்று அந்தப் பக்கம் வந்தது.

"உங்களுக்குள் என்ன தர்க்கம்?" என்று விசாரித்தது வயலின்.

மிருதங்கமும் கஞ்சிராவும் விஷயத்தை விளக்கிக் கூறின.

"இதில் தர்க்கம் எதற்கு? இரண்டுமே உயர்ந்தவை தான்" என்று அழுத்தமாகத் தீர்ப்புக் கூறியது பிடில்.

"எப்படி?" என்று கேட்டன இரண்டும்.

"புதுக்கோட்டை தட்சிணாமூர்த்திப் பிள்ளை மிருதங்கம் வாசிக்கும்போது மிருதங்கமே மிக உயர்ந்த வாத்தியமாகத் தோன்றும். அவர் கஞ்சிரா வாத்தியத்தைக் கையில் எடுத்து விட்டாலோ, 'கஞ்சிராவுக்கு மிஞ்சித்தான் மற்ற வாத்தியங்கள்!' என்று தோன்றும்" என்றது வயலின்!

**தி**ருச்சி ரேடியோவில் இன்னிசைக்கலைஞர்களைப் பற்றிய விசேஷ நிகழ்ச்சியில் முதன் முதலாகச் சென்ற 18-7-56 புதன்கிழமையன்று காலஞ்சென்ற பழம் பெரும் மிருதங்க வித்வான் புதுக்கோட்டை ஸ்ரீ தட்சிணாமூர்த்தி பிள்ளையைப் பற்றி ஓர் அரிய நிகழ்ச்சி நடைபெற்றது. ஸ்ரீ தட்சிணாமூர்த்தி அவர்களின் குருநாதர் ஸ்ரீ மான்பூண்டியா பிள்ளையின் மகள் கமலாம்பாள், ஸ்ரீ தட்சிணாமூர்த்தியின் குமாரர் புதுக்கோட்டை கலாமிர்தநாத பிள்ளை, செம்மங்குடி சீனிவாசய்யர், பாலக்காடு மணி ஐயர், ஆலந்தூர் சிவசுப்பிரமணியம், வி. ராமையா பிள்ளை, எம். எஸ். சக்திவேலு முதலானோர் மேற்படி நிகழ்ச்சியில் கலந்து கொண்டார்கள். ஸ்ரீ தட்சிணாமூர்த்தி அவர்களின் விசேஷ குணங்களைப் பற்றியும், லயக் கலையில் அவர் பெற்றிருந்த அபார ஞானத்தைக் குறித்தும் ஒவ்வொருவரும் புகழ்ந்து பாராட்டினார்கள்.



**ஸ்ரீ** பாலக்காடு மணி ஐயரும் ஸ்ரீ தட்சிணாமூர்த்தி பிள்ளையும் ஒரு சமயம் ஒரே மேடையில் சேர்ந்து வாசித்தார்கள். அன்று பிள்ளை அவர்கள் கஞ்சிரா வாசித்தார். கச்சேரிக்கு இடையில் பாகவதர் கீர்த்தனையை நிரவல் செய்து பாடிக் கொண்டிருந்த சமயம் மணி ஐயர் அபாரமாக வாசித்துக் கொண்டிருந்தார். திடீரென்று மிருதங்கத்தின் இடது தொப்பி கருதி இறங்கி விட்டது!

இது மணி அய்யர் தொடர்ந்து வாசிப்பதற்குப் பெரும் இடைஞ்சலாக இருந்தது. கச்சேரிக்கு இடையில் மிருதங்கத்தைத் தட்டிக் கொட்டிச் சரிப்படுத்தும் பொருட்டு வாசிப்பை நிறுத்த முடியாமல் தவித்ததைப் பிள்ளையவர்கள் கண்டார்.

"ஆண்டவனே! இடது தொப்பியைத் தட்டாமல் சும்மா விட்டு விடுங்கள். வலது புறத்தில் மட்டும் நடக்கட்டும்" என்றார்.

ஸ்ரீ மணி அய்யர் மிருதங்கத்தின் வலது புறம் மட்டும் வாசித்தார்.

தட்சிணாமூர்த்தி பிள்ளை தமது கஞ்சிரா வாசிப்பின் மூலம் மிருதங்கத்தின் இடது தொப்பி நாதத்தை எழுப்பிச் சபையைப் பிரமிக்க வைத்தார். "அந்த அற்புதத்தை மீண்டும் எப்போது காண்பேன்!" என்று ஸ்ரீ மணி ஐயர் பேசியபோது ஸ்ரீ தட்சிணாமூர்த்தியின் மேதையும் மணி அய்யருக்கு ஸ்ரீ தட்சிணாமூர்த்தி அவர்களிடம் இருந்த மதிப்பும் நன்கு வெளியாயின.

ஸ்ரீ செம்மங்குடி அவர்கள், "தட்சிணாமூர்த்தியின் மிருதங்கத்தில் இடியோசை, சிம்மகர்ஜனை, மாடப் புறாக்களின் குமுறல் எல்லாவற்றையும் கேட்கலாம். அவருடைய கஞ்சிரா வாசிப்பைப் பற்றியோ சொல்லவே வேண்டாம். கஞ்சிரா வாத்தியமே ஸ்ரீ பிள்ளையவர்களுக்காக ஏற்பட்டதோ என்று வியக்கும்படி இருக்கும்" என்று வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினார்.

லயக் கலையில் பெரும் புகழுடன் விளங்கிய புதுக்கோட்டை ஸ்ரீ தட்சிணாமூர்த்தி பிள்ளையைக் 'கலியுக நந்தி பகவான்' என்று ரஸிகர்கள் வர்ணிப்பது உண்டு. ஸ்ரீ பிள்ளையின் ஞாபகார்த்தமாக ஓர் அரிய நிகழ்ச்சியை வெற்றிகரமாக நடத்திய திருச்சி வானொலி நிலையத்தைப் பெரிதும் பாராட்டுகிறோம். — சாலி




# திருட்டு ராமன்

காந்தன்

ஞாபகசக்தி இல்லாமல் எத்தனையோ பேர்கள் தவிப்பதைப் பார்க்கிறேன். அவர்கள் வெள்ளித் திரையில் அடிக்கடி நமது சினிமாப் படங்களைப் பார்த்தால் பலன் கிடைக்கும்.

நாம் எப்போதோ பார்த்து அடியோடு மறந்து போன சினிமாப் பட நிகழ்ச்சிகள் மீண்டும் புதுப் படங்களிலும் துணிந்து புகுத்தப்படுவதால் பழைய நிகழ்ச்சிக ளெல்லாம் நம் மனத் திரையில் மீண்டும் ஓட ஆரம்பிக்கின்றன அல்லவா?

'ஆ! இந்தக் காட்சியை நாம் இதற்கு முன் எந்தப் படத்தில் பார்த்தோம்? ஓ! அந்தப் படத்தில் பார்த்தோம்!' என்று அவற்றை இப்பொழுது நாம் பார்க்கும் நிகழ்ச்சியோடு ஒப்பிட்டுப் பார்க்கப் பார்க்க நம்முடைய ஞாபக சக்தி வலுப்படுகிறது.

அன்னபூர்ணா பிலிம்ஸாரின் ''திருட்டு ராமன்'' படத்தைப் பார்த்தபோது, என் ஞாபகசக்தி தன் வேலையைத் துவங்கியது.

சின்ன வயதில் ராமன் திருட்டுத்தனங்கள் செய்து அவமானப்பட்ட காட்சியைப் பார்த்த போது, நான் வெகுகாலத்துக்கு முன் பார்த்த ''அன்னை'' என்ற படத்தின் சம்பவங்கள் என் மனக் கண்முன் நிழலாடின.

அநாதையாக நின்ற ராமனின் தங்கை தவித்த தவிப்பையும், சிறையில் இருப்புக் கொள்ளாமல் தங்கையை நினைத்து ஏங்கிய ராமனின் துடிப்பையும் பார்த்தபோது ''கள்வனின் காதலி''யில் வரும் முத்தையன்—அபிராமி இவர்களின் நினைவு எழுந்தது.

தங்கை லக்ஷ்மியின் நல் வாழ்வுக்காக ராமன் படாத பாடுகளெல்லாம் பட்டுப் பணம் சேர்த்த காட்சியைப் பார்த்தபோது, ''டூபான் அவுர் தியா'' என்னும் ராஜ்கமல் கலா மந்திரின் ஹிந்திப் படம் நினைவுக்கு வந்தது.

அந்தப் படத்தில் தன் சகோதரியின் நல் வாழ்வு ஒன்றையே குறிக்கோளாகக் கொண்ட சிறுவன் ஒருவன் பலவிதத்திலும் பாடுபட்டு அவளுக்கு இன்ப வாழ்வை அளிக்கிறான். தான் காதலித்த கணவனின் கரம் பற்றிய அந்தப் பெண் கண்ணீருக்கிடையே சகோதரனிடம் விடைபெற்றுக் கொள்ளுவதுடன் படம் முடிந்து விடுகிறது. உணர்ச்சி ததும்பும் சிறுகதையொன்றைப் படமாகப் பார்த்த உணர்ச்சி நம் மனத்தில் எழுகிறது.

''திருட்டு ராமன்'' படத்தில் ராமனாக நடிக்கும் நாகேசுவர ராவ் தாம் ஒரு சிறந்த நடிகர் என்பதை நிரூபிக்கிறார். சிறையிலிருந்து விடுதலை யடைந்து, தங்கையைத் தேடி வழி நெடுக அலைந்து வாடித் திரிந்த ராமன், காய் கறி விற்கும் சிறுமியைத் தடுவழியில் இம்சித்த போக்கிரியை மடக்கி, 'தண்டுப் பிடி', 'கரடிப் பிடி' முதலிய மல்யுத்தப் பிடிகளைப் போட்டுப் போட்டுத் தூக்கி அவள் உள்ளத்தில் கலபமாக இடம் பெற்று விடுகிறான். இந்தக் கட்டங்களில் நாகேசுவர ராவின் நடிப்பு 'சபாஷ்' போடச் சொல்லுகிறது.

பிறகு ராமன், தங்கை லக்ஷ்மி அநாதை ஆசிரமப் பள்ளிக்கூடத்தில் இருப்பதை அறிந்து



அங்கே செல்லுகிறான்; ராமனின் ஏழைமைக் கோலத்தைக் கண்ட அநாதை ஆசிரமக் காவலாளி தடுக்கிறான். பின்பு, ராமன் ஹாட்டு, பூட்டு, சூட்டுடன் ஆடம்பரமாக வந்தபோது அவனுக்கு ராஜோபசாரம் செய்து வழி விடுகிறான். இந்தக் கட்டங்களிலெல்லாம் படம் விறுவிறுப்புடன் செல்லுகிறது.

தங்கை லக்ஷ்மியாக நடிக்கும் ஜமுனா வருங்காலத்தில் இன்னும் பெரிய நடிகையாக வரக் கூடியவர். வெகு காலத்துக்குப் பிறகு அண்ணன் ராமனைச் சந்தித்த போதும், அநாதை ஆசிரமத்தை விட்டு வெளியேறி வழியில் தூர்த்தன் ஒருவனிடம் சிக்கிக் கற்புக்காக அவனுடன் கடுமையாகப் போராடும்போதும், ஜுரம் அடித்துக் கிடந்த போது அவளுக்குச் சிகிச்சை செய்த டாக்டர் வீட்டில் பணிவாகப் பணியாற்றிய போதும் ஜமுனாவின் நடிப்பு நன்றாயிருந்தது.

காய்கறி விற்கும் சீதாவாக நடிக்கும் சாவித்திரி சாகசம், சாமர்த்தியம், சாதுர்யம், துடிப்பு முதலிய பல அம்சங்களுடன் நன்றாக நடித்திருக்கிறார். இந்தப் படத்தில் காய்கறிகள் விற்பதோடும், ராமனைக் காதலித்ததோடும் சாவித்திரியின் வேலை நின்றுவிடவில்லை; ராமன்மேல் சாட்டப்பட்ட கொலை, கொள்ளைக் குற்றத்திலிருந்து அவனைத் தப்புவித்துக் கடைசியில் அவனைக் கல்யாணம் செய்து கொண்டு "இருட்டு ராமன்" படத்தையும் முடித்து வைக்கிறார்.

இந்தப் படத்தில்காதல் கட்டம் இலேசாக அமைந்து கொஞ்சம் அலுப்பைக் குறைக்கிறது. உரை நடையில் பல இடங்களில் ஹாஸ்யம் நளினமாகப் புகுந்திருக்கிறது. தெலுங்கிலிருந்து 'டப்' செய்யப் பட்டிருந்தாலும் படம் நன்றாக இருக்கிறது.

ரேலங்கி வேங்கடராமய்யாவின் நடிப்பில், ஆரம்பம் முதல், கடைசியில் கொலை செய்யப் படும் வரையில் உயிர் இருக்கிறது!

"இருட்டுராமன்" படம் இன்னும் குறைக்கப்பட்டால் இன்னும் நன்றாகவும் விறுவிறுப்பாகவும் இருக்கும். படம் பார்த்து முடித்ததும் கறுகறுப்பாகப் போய்ப் பல்லைப் பிடிப்பதற்கும் சௌகரியமாயிருக்கும்.

# 16வது அகில இந்திய காதி, கைத்தறி, சுதேசி & கைத்தொழில் பொருட்காட்சி, சேலம் 1956

(சேலம் நகரசபையால் நடத்தப்படுவது)

**இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள் - கலை அரங்கில் தினசரி மாலை 6-30 மணிக்கு**

○●○

| 1956 ஆகஸ்டு | விவரம் | நிகழ்ச்சி |
|---|---|---|
| 5 ஞாயிறு | குமாரிகள் சசி, கலா, மாலா ... ... | நடனம் |
| 6 திங்கள் | குமாரி நீலா ... ... | நடனம் |
| 7 செவ்வாய் | குமாரிகள் R. K. அம்புஜம், R. K. சகுந்தலா ... | நடனம் |
| 8 புதன் | கந்தர்வ கான ரத்ன திரு M. K. தியாகராஜ பாகவதர், S. D. சுப்புலக்ஷ்மி பார்ட்டியார் ... | 'ஹரிதாஸ்' நாடகம் |
| 9 வியாழன் | குமாரிகள் சாயி - சுப்புலக்ஷ்மி ... ... | நடனம் |
| 10 வெள்ளி | திரு N.S. கிருஷ்ணன், T.A. மதுரம் பார்ட்டியார் ... | 'நாபதி' நாடகம் |
| 11 சனி | திரு M. G. ராமச்சந்திரன் & பார்ட்டியார் | 'சுமைதாங்கி' நாடகம் |
| 12 ஞாயிறு | ஷை ஷை ... ... | ஷை |
| 13 திங்கள் | ஷை ஷை | 'அட்வகேட் அமரன்' |
| 14 செவ்வாய் | குமாரி E. V. சரோஜா (மதுரை வீரன் புகழ்) ... | நடனம் |
| 15 புதன் | திருமதி K. B. சுந்தராம்பாள் ... ... | பாட்டு |
| 16 வியாழன் | சேவா ஸ்டேஜ் சர்வீஸ் ... ... (சகஸ்ரநாமம், மைனாவதி, பண்டரிபாய்) | 'மோகினித் தீவு' நாடகம் |
| 17 வெள்ளி | ஷை ... ... | ஷை |
| 18 சனி | ஷை ... ... | ஷை |
| 19 ஞாயிறு | திரு விஸ்வநாதன் & பார்ட்டியார் ... ... (பிரபல சினிமா பின்னணி பாடகர்களும் பாடகிகளும்—கண்டசாலா, சவுந்திரராஜன், லோகநாதன் சி. எஸ். ஜெயராமன், ஜிக்கி, பாலசரஸ்வதி, ராணி, கோமளா, சுசீலா, ஜமுனா மற்றும் பலர்) | இசை விழா |
| 20 திங்கள் | குமாரி 'மாடி' லட்சுமி, பேபி சரஸ்வதி (மதுரைவீரன் புகழ்) | நடனம் |
| 21 செவ்வாய் | செல்வா தியேட்டர்ஸ் ... ... (பி. கே. சரஸ்வதி, சி. கே. சரஸ்வதி, அசோகன்) | 'குறத்தி' நாடகம் |
| 22 புதன் | ஷை ... ... | ஷை |
| 23 வியாழன் | தேசிய நாடக மன்றம் ... ... (வித்யாவதி, லோகநாதன், சி.வி.வி. பந்துலு) | '1942 நாடகம்' |
| 24 வெள்ளி | குமாரி பத்மினி, பிரியதரிசினி ... ... | நடனம் |
| 25 சனி முதல் 1-9-56 வரை (8 நாட்கள்) | T. K. S. சகோதரர்கள் | 'இராஜராஜசோழன்' நாடகம் |
| 2-9-56 ஞாயிறு | ஷை | ...'வாழ்வில் இன்பம்' |

சேலம், 20-7-56

பொருட்காட்சிக் கமிட்டியார்

"கைத்தறித் துணிகளையே கட்டுங்கள்"

"அம்மா! பேட்டிக்கு வரச் சொல்லிக் கடிதம் வந்திருக்கிறது."

தன் கண்களை நம்பமுடியாமல் கடிதத்தை வாங்கிப் பார்த்தாள், அவள் தாய். ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருந்ததை வாசிக்கச் சொன்னாள். அக்கடிதத்தில் சரளாவை வேலைக்கு அழைத்திருந்தார்கள்.

"அம்மா! நீ மாமாவை என்னமோ சொன்னாயே; அவர் தங்கமானவர்."

"நீ யார் என்று அவருக்குத் தெரியாது. தெரிந்தால், உனக்கு வேலை தரமாட்டார். அவர் குணம் எனக்குத் தெரியும்."

"ஆமாம், உன்னுடன் பிறந்தவர் குணம் உனக்குத் தெரியாதா? நான் வேலைக்குப் போவதில் உனக்கு ஆட்சேபம் இல்லையே?"

"ஆட்சேபிக்க இதில் என்ன இருக்கிறது? நீ படித்த பெண். கெட்டிக்காரி. உனக்குப் பட்டணத்தில் சிநேகிதிகள் உண்டு. ஆனாலும் ஜாக்கிரதையாக நடந்து கொள். நீ என்றைக்குப் போக வேண்டும்?" என்றாள் தாயார்.




"நாளைக்குப் புறப்பட வேண்டும். இதில் ஒரு நன்மை. மாமாவுக்கு நான் அந்தரங்கக் காரியதரிசியாகப் பணியாற்றப் போகிறேன். முன் பின் அறிமுகம் இல்லாத வேற்று மனிதர் வீட்டுப் பெண் போலவே நடந்து கொள்வேன். உறவைப்பற்றிச் சொல்ல மாட்டேன்."

"கண்யமாக நடந்து கொள். உன் மாமன் குணம் ரொம்ப முரடு. பிரயாணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய். ஆமாம், உன்னைப் போலவே பலருக்கும் பேட்டிக்கு வரச்சொல்லிக் கடிதங்கள் போயிருக்குமோ?"

"அதைப் பற்றி நமக்கு என் கவலை? முயற்சி செய்து பார்ப்போம். வெற்றி கிட்டவில்லை யென்றால் இருக்கவே இருக்கிறது, உபாத்தியாயினி வேலை!" என்று கூறி விட்டுப் பெட்டியிலே துணிமணிகளை அடுக்க ஆரம்பித்தாள் சரளா.

அதே சமயம், அவள் தாயார் மனசில் பல ஆண்டுகளுக்கு முன் நடந்த ஒரு சம்பவம் நிகழ்ந்து கொண்டிருந்தது. அவள் தமையன் பெரிய கம்பெனி முதலாளி. அவருக்குப் பிள்ளை யில்லை. தங்கையின் இரு பெண்களில் சரளாவைத் தத்துத் தரும்படி கேட்டார். விரும்பிக் கேட்பது அண்ணன் என்றாலும், தங்கை கொடுக்க மறுத்து விட்டாள். அந்தக் கோபம் அண்ணனுக்கு இருந்து கொண்டிருந்தது. சரளாவின் தங்கை நோய்ப்பட்டு இறந்தாள். எஞ்சியது சரளா ஒருத்திதான்.

பல நாட்களுக்குப் பிறகு, சரளாவின் தாயார் தமையனை அணுகினாள். தன் வறுமை காரணமாக, சரளாவைத் தத்துக் கொடுக்கச் சம்மதம் தெரிவித்தாள். அவளை எப்படியாவது வளர்த்து முன்னுக்குக் கொண்டுவர வேண்டும் என்று மன்றாடினாள். அவள் அண்ணன், பழைய



சௌ. சந்திரா — சி. கிருஷ்ணமூர்த்தி

என் கனிஷ்ட சகோதரன் சிரஞ்சீவி S.N.D. கிருஷ்ணமூர்த்திக்கும், ஸ்ரீ TR.L. ராமமூர்த்தி அவர்களின் புதல்வி சௌ. சந்திராவுக்கும் 9-7-56ந் தேதி மதுரையில் நடைபெற்ற திருமணத்தின்போது நேரில் விஜயம் செய்தும், வாழ்த்துச் செய்திகள் அனுப்பியும், பரிசுகள் வழங்கியும் திருமணத்தைச் சிறப்பித்த நண்பர்கள், உறவினர்கள், வர்த்தகர்கள் ஆகியோர்க்கு என் மனமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**S. N. D. ராமமூர்த்தி**
**S. N. தேவேந்திர ஐயர் சன்ஸ்**
**43, ராமனுதபுரம் ரோடு, மதுரை**
**கிளைகள் :**
**பம்பாய், பரமக்குடி, திண்டுக்கல், வீரவநல்லூர்**



**கமலாதேவி — மவுன பிள்ளை**

மணமகள் : யாழ்ப்பாணம் வல்வெட்டித்துறை ஸ்ரீ எஸ். வயிரமுத்து பிள்ளை குமாரத்தி சௌபாக்யவதி **கமலாதேவி.**
மணமகன் : யாழ்ப்பாணம் பிரபல ஜவுளி வியாபாரி ஸ்ரீ ஏ. செல்லத்துரை பிள்ளை குமாரர் சிரஞ்சீவி **மவுன பிள்ளை.** விவாகம் 23-6-56ல் மணமகள் இல்லத்தில் சிறப்பாக நடைபெற்றது.

திருமணத்திற்குப் பல பிரமுகர்களும், வியாபாரிகளும் கலந்து கொண்டு தம்பதிகளை ஆசீர்வதித்துப் பரிசுகள் வழங்கினர்.

சம்பவத்தை மனத்தில் வைத்துக் கொண்டு பிடிவாதமாக மறுத்து விட்டார். அவள் மனவேதனையுடன் தன்னந் தனியாக மிகுந்த சிரமத்துடன் சரளாவை வளர்த்து, படிக்க வைத்தாள். சரளா தன்னைக் காப்பாற்றிக் கொள்ளும் நிலைமைக்குக் கொண்டு வந்துவிட்டாள். ஆனால் அவளுக்குத் தன் பெண்ணை வேலைக்கு அனுப்ப விருப்பம் இருக்கவில்லை. அதனால்தான் தன் தமையன், கம்பெனியில் 'ஒரு பெண் டைப்பிஸ்டு தேவை' என்று தெரிய வந்ததும்,—சரளா எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் கேளாமல்,—அந்த வேலைக்கு மனுப்போட வேண்டாமென்று அவளைத் தடுத்தாள். ஆனால் சரளா பிடிவாதமாக மனு எழுதிப் போட்டாள். அநுகூலமான மறுமொழியும் அவளுக்குக் கிடைத்தது.

மறுநாள், ரயிலில் மகளை அனுப்பிவிட்டு வீட்டுக்கு வந்த தாய்க்கு ஒரே சோகம். ஆனால், கம்பெனிக்குப் பேட்டிகாண வந்த முப்பது பெண்களில் சரளா வெற்றி பெற்றாள்.

* * *

**மா**ருதி அண்டு கம்பெனி முதலாளிக்குத் தமது அந்தரங்கக் காரியதரிசி சரளாவிடம் அளவுகடந்த மதிப்பு. வேலையைச் செய்யும் திறமை, ஊக்கம், எல்லாவற்றுக்கும் மேலாகச் செய்வதைச் சிரித்த முகத்தோடு செய்வது—இத்தனையும் பிடித்துப் போய் விட்டன.

அடுத்த மாசம் சரளாவுக்குச் சம்பளம் உயர்த்தப்பட்டது.

அங்கே அதை ஆட்சேபித்தவர்கள் பலர். முக்கியமாக, மானேஜர் சிவராம் அதைப் பலமாக ஆட்சேபம் செய்தான்.

"மிஸ்டர் சிவராம்! நீ இளைஞன். உனக்கு இந்தக் கம்பெனியின் மானேஜர் என்ற பதவிக்கு எவ்வளவு சம்பளம்?"

"முந்நூறு!"

"இதை நான் நினைத்தால் அதிகமாக்கலாம்."

"ஆமாம்."

"அப்போது இக் கம்பெனி ஆட்கள் யாராவது வந்து சிவராமுக்கு மட்டும் என்ன உயர்வு என்று கோபம் கொண்டால்?... அவர்கள் சம்பளமும் உயரவேண்டுமென்று கேட்டால்?...நான் என்ன செய்வது?"

சிவராம் பதில் பேசாமல் தன் சிவந்த கன்னங்களைத் தடவிக் கொண்டான். அதே சமயம் 'ஆஸ்பெஸ்டாஸ்' தட்டிக்கு அப்பால் இருந்த சரளா சிரித்தாள்.

முதலாளியும் சிரித்தார். முகம் சிவக்க மானேஜர் சிவராம் வெளியே போனான். அவன் கோபம், நடந்து சென்ற பூட்ஸின் ஓசையில் இருந்தது. சரளாவுக்குத் திக்கென்றது. அவனுடைய சிரிப்பு ஒருவேளை அவர் உள்ளத்தில் புகுந்தால்?....

மத்தியானம் இடைவேளை.

முதலாளி காரில் வீட்டுக்குப் போய் விட்டார். சரளா தன்னுடைய சாப்பாட்டை மறந்து, பூனை போலப் பயந்து பயந்து மானேஜர் அறைக்குள் நுழைந்தாள். அது ஓய்வு நேரமாக இருந்த காரணத்தால் கண்ணை மூடியபடியே காலை மேஜையின் மேல் தூக்கிப்

போட்டுத் தூங்கும் பாவனையில் இருந்தார் மானேஜர் சிவராம். .

சத்தமின்றி உள்ளே நுழைந்ததால் சரளா வந்ததைச் சிவராம் கவனிக்கவில்லை. இது வரையில் எத்தனையோ முறை சரளா அந்த அறைக்குள் 'நோட்ஸ்' எடுக்க வந்திருக்கிறாள். ஆனால் இன்று பயத்தால் அவள் இதயம் படபடத்தது.

சரளா இருமினாள். தான் வந்திருப்பதைச் சொல்ல வேறு வழி? சிவராம் டக்கென்று மேஜையின்மேல் இருந்த காலை எடுத்துக் கொண்டு, எதிரே சரளா நிற்பதைப் பார்த்தான். அடுத்த கணம் கவலை தோய்ந்த முகத்திலே ஒருவிதமான சலனமும் காணோம்.

''ஓகோ, வாருங்கள்! என்ன காரணம்? டிபன்-வேளை முடிந்து விட்டதா?''

சிரித்துக் கொண்டுதான் கேட்டான். கை தேர்ந்த நடிகனின் முகபாவம் அது. சரளாவின் மனத்துள்ளே படிந்தது. அந்தச் சலனமில்லாக் குரல்.

''நான் நான்..'' சரளா மேலே பேச முடியாமல் கண்ணீர் மல்க மௌனமாக நின்றாள். அவள் அழுவதின் காரணம் சிவராமுக்குப் புலனாகாமல், ''ஏன், என்ன நடந்தது?'' என்று கேட்டான்.

''நான் தெரியாத்தனத்தினால் சிரித்துவிட்டேன். தங்கள் மனசைப் புண்படுத்தி விட்டதாக உணர்கிறேன். என் பிழையைத் தாங்கள் மறந்து மன்னிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளவே வந்தேன்.''

சிவராம் பதில் சொல்வதற்கு யோசித்தான். அவள் பேச்சிலே உண்மை இருப்பதை உள்ளம் உணர்ந்தது. அவன் பேச ஆரம்பிக்கு முன்னதாக, சரளா ஆடுகதவைத் திறந்து கொண்டு வெளியே போய் விட்டாள்.

மூன்று மாதங்கள் ஓடி விட்டன.

ஒருநாள் காலை மணி பத்தேகால் இருக்கும். முதலாளி, தமது சேவகனைக் கூப்பிட்டு மானேஜரை அழைத்து வரச் சொன்னார். சேவகன் போய் வந்து உதட்டைப் பிதுக்கினான்.

தமக்கு எதிராகச் சரளாவைக் காணவில்லை.

இது இன்று நேற்று சமாசாரமில்லை. கடந்த ஒரு மாதமாக இருவரும் தாமதித்து வருவதை அவர் அறிந்தார்.

கடிகாரத்தில் சிவப்பு நிறமான முள், வினாடிக்கு வினாடி துடிப்பேறி நகர்ந்து கொண்டிருந்தது. ஆயிற்று ஒரு நிமிஷம், இரண்டு நிமிஷம் என்று அரைமணி ஆகிவிட்டது. முதலாளி தம்முடைய அதிகாரத்தைக் காட்டுவதற்குத் தயார் செய்து கொண்டிருந்தார்.

சரளாவின் சிரிப்பு கட்டடத்துக்குள் கேட்டது. அதை அடுத்து மானேஜரின் கால் பூட்ஸ் சத்தம் கேட்டது. முதலாளிக்குக் கண்கள் இரண்டும் சிவந்தன.

சரளா, ''வணக்கம்'' என்று சொல்லிக் கொண்டு எதிரே வந்து அமர்ந்தாள். முதலாளி ஏதும் பதில் சொல்லாமல் அவளை முறைத்துப் பார்த்தார்.

''இன்றைக்குக் கொஞ்சம் நேரம் ஆகி விட்டது. மன்னிக்க வேண்டும்'' என்று சரளா



**கமலாம்புஜம் — வி. கே. ஸ்ரீதர், B.Sc.,**

மணமகன்: சென்னை, பிரபல காங்கிரஸ்காரரும், யோகாசன நிபுணரும், கெட்டிச்சாய கலர் நூல் வியாபாரியுமான ஸ்ரீ வி. என். குமாரஸ்வாமி அவர்களின் குமாரர். மணமகள்: சேலம் தேக்குமரச் சாமான் வியாபாரம், சங்கர விலாஸ், ஸ்ரீ பி. ஆர். துளசிராம் அவர்களின் குமாரத்தி. விவாகம் 17-6-1956 அன்று மணமகன் இல்லமாகிய சென்னை, தண்டையார்ப்பேட்டை, ''குமார நிலயத்''தில் விமரிசையாக நடைபெற்றது.



**சௌ: லலிதா — சிரஞ்சீவி: நாகசாமி**

மதுரை ஸ்ரீ ஏ. ஜே. கிருஷ்ணமாச்சாரியாரின் செல்வப் புத்திரி சௌ. லலிதாவுக்கும், மதுரை ஸ்ரீ எம். ஏ. என். குப்புசாமி அய்யரவர்களின் புதல்வன் சிரஞ்சீவி எம். கே. நாகசாமி B.A., Dip. S. S. A.க்கும் 9-7-56ந் தேதி மதுரை கீழ வெளி வீதி, நெ. 85, மணமகள் இல்லத்தில் விவாஹம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்த்துச் செய்திகள், சன்மானங்கள் ஏராளமாக அனுப்பி வைத்து வைபவத்தைச் சிறப்பித்த நண்பர்கள் உறவினர்கள் ஆகியோருக்கு ஸ்ரீ ஏ. ஜே. கிருஷ்ணமாச்சாரியார் தம் மனமார்ந்த நன்றியறிதலை இதன்மூலம் தெரிவித்துக் கொள்ளுகிறார்.

நிச்சயமாக வாங்க வேண்டியது!

# ரீஸா ரேடியோ



பாபுலர் மாடல்

**நிகர விலை ரூ. 225**

ஏஸி., ஏஸி./டிஸி., மற்றும் பாட்டரியில் இயங்கும். 5, 6 வால்வ் மாடல்களும் உண்டு.
12 மாத உத்தரவாதம்

## ரீஸா கம்பெனி

20, நாரல்ஸ் ரோடு
நேப்பாக்கம் :: சென்னை-10

போன்: 61515 தந்தி: ASSEMBLER



# RECOLLECTIONS of LENIN

*Just arrived*

PRICE: AS. 6.
POSTAGE AS. 3.

*Available with:*

NEW CENTURY BOOK HOUSE
199 Mount Road. Madras-2

NEW CENTURY BOOK HOUSE
C-17, Majestic Circle, Bangalore

**DEPENDABLE**

# SERVICE



அனேக மயர்ஸ் பம்புகள் சென்ற 25 வருஷங்களுக்கு மேலாகத் திறம்பட சேவை செய்து வருகின்றன. உயர்ந்த முறையில் மயர்ஸ் பம்புகள் தயாரிக்கப் படுவதாலும், விற்பனைக்குப் பிறகு உடனுக்குடன் கம்பகமான முறையில் சேவை அளிக்கப்படுவதாலும் சிறந்து விளங்குகின்றன.

**MYERS**
**AUTOMATIC**
**ELECTRIC PUMPS**



**வாட்டர் சப்ளை ஸ்பெஷலிஸ்ட்ஸ்**
**பிரைவேட் லிமிடெட்**

45, தம்பு செட்டித் தெரு, சென்னை-1

அவர் முகத்தின் குறிப்பைப் பார்த்துத் தெரிந்து கொண்டு ஆரம்பித்தாள்.

"ப்யூன்" என்ற கர்ஜனை முழங்கிற்று. அவன் குறிப்பறிந்து எட்டிப் பார்த்தவன், ஆடு கதவைப் பிடித்துக் கொண்டு, "மானேஜர் ஐயாவைக் கூப்பிடட்டுமா?" என்றான்.

"கூப்பிடு!" என்றார் முதலாளி கடுமையாக.

மானேஜர் சிவராம், வாய் நிறைய வெற்றிலை போட்டு அப்போதுதான் துப்பியிருந்தார். உதட்டிலே சிவப்பின் செழுமை படர்ந்திருந்தது. அவரது உடைகளில் கமழ்ந்த மணம், கிராப்புத் தலையை வாரியிருக்கும் மாதிரி எல்லாம் முதலாளியின் கோபத்தை அதிகமாக்கின.

"என்ன ஸார்?" என்று கேட்டுவிட்டு அவருக்கு எதிரிலுள்ள நாற்காலியில் வந்து அமர்ந்தான் மானேஜர் சிவராம்.

"சரளா, நீ கீழே உள்ள வெயிட்டிங் ரூமில் போய்ப் பத்து நிமிஷம் இருக்கலாம். பிறகு வா!" என்று கூறிவிட்டு முதலாளி மானேஜரை வெறிக்கப் பார்த்தார். ஏதோ ஆபத்து வந்து கொண்டிருக்கிறது என்பதை அறிந்தான் சிவராம். சரளா முதலாளியின் அறைக்குள்ளிருந்து வெளியே போகும் ஒலி இலேசாகக் கேட்டது.

"உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். கடந்த ஒரு மாதமாக உங்கள் நடவடிக்கை எனக்குப் பிடிக்கவில்லை. நீங்கள் சரளாவை மணப்பதாக இருக்கலாம். உங்கள் சொந்த விவகாரத்தில் நான் தலையிடவில்லை. அவள் இக்கம்பெனி சிப்பந்தியென்ற முறையில் சொல்லுகிறேன். உங்களுடைய அந்தஸ்துக்கு வேறு இடங்களைப் பாருங்கள். இனிமேல் நீங்கள் இருவரும் தாமதமாக வருவதை அனுமதிக்க முடியாது. காரியாலயத்திலிருந்து இருவரும் சேர்ந்து போவதையும் நீங்கள் மறந்து விடலாம்."

சிவராம் அவர் சொன்னதைக் கவனமாகக் கேட்டான். அவன் எதிர்பார்த்தது நடக்கிறது. முதலாளிக்கு அவனைக் கண்டிக்க உரிமை உண்டு.

"ஆபிஸுக்குத் தாமதமாக வந்தது தவறு. மன்னித்துவிடும்படி கேட்டுக் கொள்கிறேன், உங்களிடம் இன்று சொல்ல வேண்டுமென்று இருந்தேன்....."

"கடந்த ஒரு மாதமாக உங்கள் நடத்தையில் மாறுதலைக் கவனித்து வருகிறேன்! நீங்கள் ஆபீஸுக்குத் தாமதமாக வரும் மாறுதல் மட்டுமல்ல, நம்முடைய கம்பெனியின் பெயர் வேறு உங்கள் மாறுதல் காரணமாகத் தெருவில் அடிபடுகிறது."

"....கொஞ்சம் கவனிக்க வேண்டும். பெயர் கெட்டுப் போவதை அதில் சம்பந்தமுள்ள ஆண்-பெண் இருவரும் கவனிப்பது நியாயம். கம்பெனிக்குத் துரோகம் செய்யாத வரையில் வெளியே உள்ள என் வாழ்க்கையைப் பற்றித் தாங்கள் கேட்பது அநுசிதம்."

முதலாளியின் உள்ளத்தில் ஆயிரம் தேள்கள் ஒரே இடத்தில் சேர்ந்து கொட்டுவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அவரால் எதுவும் மறுத்துச் சொல்ல முடியவில்லை.

"இவ்வளவுதானா?" என்று கடுமையாகக் கேட்டார் முதலாளி.

சிவராம் குரலைத் தாழ்த்திக் கொண்டான். சற்றுக் கோபமாகப் பேசி விட்டதை அறிந்து அவன் மிகவும் கவனமாக, "இன்று உங்களிடம் சொல்ல இருந்தேன். நான் சரளாவை மணந்து கொள்ளப் போகிறேன். நாங்கள் இருவரும் இதைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்து விட்டோம்" என்று சுருக்கமாகச் சொன்னான்.

முதலாளி, "அது உங்கள் இருவர் விருப்பம். மணமான இருவர் என் கம்பெனியில் வேலை பார்க்க முடியாது. அது பலவிதமான கஷ்டங்களைக் கொண்டுவரும். உங்களுக்கு வேலைமீது விருப்பமானால் ஆபீஸில் இருங்கள். இல்லையென்றால் விலகிக் கொள்ளலாம். அதைச் சொல்லவே நான் உம்மைக் கூப்பிட்டேன்" என்று கூறி முடித்துவிட்டுத் தமது வேலையைப் பார்த்தார். எதிரே உட்கார்ந்திருந்த சிவராம் பேச்சுமூச்சு விடவில்லை.

"நீங்கள் போகலாம்" என்றார் முதலாளி.

சிவராம் வெளியே எழுந்து போய் விட்டான். ஐந்து நிமிஷத்தில் இங்கே நடந்தது எதுவும் தெரியாத சரளா தன் அறைக்குள் வந்து முதலாளிக்கு எதிராக அமர்ந்தாள்.

"சரளா! நீ மிகவும் வேலையில் கெட்டிக்காரி. ஆனால் உன்னுடைய போக்கு இந்த ஆபீஸுக்குச் சரிப்பட்டு வராது. மானேஜரிடம் உனக்கு இருதய பூர்வமான...."

சரளா குறுக்கிட்டாள். முதலாளி அதற்குள் கையமர்த்தி மேலே சொல்லலானார்:

"சரளா, கொஞ்சம் கவனமாகக் கேள். கல்யாணம் செய்து கொண்ட தம்பதிகளுக்கு இங்கே வேலை யில்லை. ஆகவே, நீ என்ன சொல்லுகிறாய்? உன்னுடைய வயதான தாயாரைக் காப்பாற்றுவதற்கு நீ வேலை பார்ப்பதாகப் பேட்டியில் சொன்னாய். அதனாலேயே உன்னைத் தேர்ந்தெடுத்தேன். நீயும் வேலையில் கெட்டிக்காரி. அதனாலேயே சம்பள உயர்வு மறு மாதம் தந்தேன். இப்போது நடக்கும் விளையாட்டு உன் வாழ்க்கையின் விளையாட்டு. சொல். வேலையா? விவாகமா? நீ விரும்புவது எது?"

முதலாளியின் கேள்வி சரளாவுக்கு இடியோசை கேட்பதாய்ப் பட்டது.

"மானேஜர் என்னை மணப்பதாகச் சொல்லி விட்டார். என் அம்மாவும் சம்மதம் கொடுத்து விட்டாள். நான், இன்னும் ஒரு வாரத்தில் வேலையிலிருந்து நின்று கொள்வேன்!"

"இன்றைய முடிவைச் சொல். ஐந்து நிமிஷம். இல்லையென்றால்?...."

சரளா திகைத்தாள்.

"இன்றே நான் வேலையை விட்டு நின்று கொள்ளுகிறேன்."

"சரி; சேவகன்! இந்த அம்மாவின் சம்பளத்தைத் தீர்க்கச்சொல்" என்றார் முதலாளி. அந்த விநாடியே சேவகன் சரளாவைக் கணக்காளர் நாற்காலிக்கு அழைத்துச் சென்றான். அவள் அங்கே போனபோது சிவராம் கணக்கைத் தீர்த்துப் பணத்தை வாங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தாள்.

அலுவலக சிப்பந்திகள் ஒருவருக்குத் தெரியாமல் ஒருவர் சிரித்தார்கள். சரளா—சிவராம் இருவரும் ஒருவரை ஒருவர் பார்க்க அஞ்சித் தலை தாழ்த்தினார்கள்.

இருவரும் தங்களுக்குச் சேர வேண்டிய சம்பளத்தை வாங்கிக் கொண்டார்கள். ஜோடியாக ஒருமணிக்கு உள்ளே வந்தவர்கள் இப்போதும் ஜோடியாக ஆபீஸ் படி யிறங்கி வெளியே போய்க் கொண்டிருந்தார்கள்.



பம்பாய்த் தமிழ்ச் சங்கத்தின் வளர்ச்சிக்கு நீண்டகாலமாகப் பணி புரிந்துவரும் ஸ்ரீ டி. எஸ். ஹரிஹரன்—சாவித்திரி திருமணம் 2—7—56 அன்று மதுரையில் சிறப்புடன் நடைபெற்றது. **வாழ்க மணமக்கள்.**

"என்றால் உங்கள் வேலை போய் விட்டது" என்றான் சிவராம்.

"போகட்டும். நாம் பிழைத்துக் கொள்வோம்" என்றாள் சரளா.

அவர்கள் என்ன செய்வதெனத் திகைத்தார்கள். சரளா, சிவராமைத் தன் வீட்டுக்கு வரும்படி கேட்டுக் கொண்டாள். அங்கே போய் மேல் யோசனைகள் செய்யலாமென்று புறப்பட்டார்கள். வேலை போன கையோடு தன் வீட்டுக்குப் போகச் சிவராமுக்கு வெட்கமாக இருந்தது. சரளாவின் அறைக்கு அவர்கள் போனசமயம் வாசலில் ஒரு சைக்கிள் ரிக்ஷா வந்து நின்றது. அதிலிருந்து சரளாவின் தாயார் இறங்கினாள். தாயைக் கண்டதும் சரளாவுக்குப் பகீரென்றது.

"ஏனம்மா சரளா, உனக்கு உடம்புக்கு என்ன? தந்தி கொடுத்தாயே!" என்று கேட்டாள் தாயார் பரபரப்போடு.

இதைக் கேட்டுச் சிவராமும் திகைத்தான். "தந்தியா?" என்றார்கள் இருவரும்.

"நான் கொடுக்கவில்லை!" என்றாள் சரளா திகைப்போடு.

"யார் தந்தி கொடுத்தது? என்ன நோக்கத்தோடு?" என்று அவர்களுக்குள் தர்க்கம் நடந்தது. தங்கள் இருவருக்கும் வேலை போய் விட்ட விஷயத்தை அவள் அம்மாளிடம் சொல்லாமல் இருவரும் மறைத்தார்கள்.

அரை மணி ஓடிற்று. சிவராம் பித்தன் போல இருந்தான். தனக்கும் சரளாவுக்கும் ஒரே நாளில் வேலை போனதால் அவன் உள்ளத்தில் வேதனை. சரளாவின் தாயாருக்குத் தந்தி கொடுத்தது யார் என்பது தெரியாமல் வியப்பா யிருந்தது.

"நான்தான் தந்தி கொடுத்தேன்" என்று சொல்லிக் கொண்டு மாருதி அண்டு கம்பெனி முதலாளி அங்கே வந்தார்.

"அண்ணா! வாருங்கள். நீங்கள் தான் கொடுத்திருப்பீர்கள் என்று நினைத்தேன். சௌக்கியமா?" என்றாள் சரளாவின் தாயார்.

அந்த உறவுச் சொல் தீப்பந்தம்போலச் சிவராமின் உள்ளத்தில் ஊடுருவிற்று. அதை வெளிப்படையாகச் சரளாவிடமே கேட்டுவிட்டான். "சரளா, உனக்கு முதலாளி உறவா?"

"ஆம். அவர் என் தாய் மாமன். இந்த உறவை அவர் அறிய மாட்டார்" என்றாள்.

சிவராம் கோபித்துக் கொண்டு வெளியே நடக்க முயன்றான், சரளா தன்னிடம் பெரிய ரகசியத்தை ஒளித்து வைத்திருந்தாள் என்பதற்காக.

"சிவராம்! நில்; சரளாவுக்குத் தெரியும், நான் அவளுக்குத் தாய்மாமன் என்று. எனக்கும் அவள் உறவினள் என்று தெரியும். அவள் வேலைக்கு வருமுன்னதாக என் தங்கை ஒரு கடிதம் எழுதினாள், தன் குடும்ப காலட்சேபத்தை முன்னிட்டும் மகளுடைய வருங்கால வாழ்க்கையை முன்னிட்டும் கண்காணித்து வைக்கவேண்டுமென்று. நான் ஒன்றும் அறியாதவன் போன்று இருந்து வேலை தந்தேன். உங்களுக்குள் காதல் வளர்வதையும் கவனித்தேன்!"

சரளா, "நீங்கள் முதலாளி என்ற முறையில் எதுவும் சொல்ல வேண்டியதில்லை. இந்தப் பரந்த உலகில் நாங்கள் எப்படியும் வாழ்வோம்" என்றாள்.

'நாங்கள்' என்று தன்னையும் சேர்த்துக் கூறிவிட்டு அவள் பார்த்த பார்வையில் கோடி கோடி அன்பு வெளிப்பட்டு விட்டதைச் சிவராமன் கண்டான்.

"உங்கள் இருவரையும் சோதிக்கவே வேலையை விட்டுத் தள்ளுவதாக ஏற்பாடு. அப்போதுதான் உங்கள் உண்மையான காதல் புரியும். வேலை பெரியதல்ல, விவாகமே பெரிது என்று சொல்லி விட்டீர்கள். இனி நீங்கள் தம்பதிகள் ஆவதில் ஆட்சேபணை இல்லை."

"அண்ணா, நீ மிகவும் அன்பான குணம் நிறைந்தவன். தத்துத் தரவில்லை என்றபழைய சம்பவத்தை மறந்து, சரளாவுக்கு உதவி செய்தாய்" என்றாள் சரளாவின் தாயார்.

"உன்னுடைய தாயன்புதான் எனக்கு விழிப்பைத் தந்தது. நீ, பேட்டித் தேதிக்கு முன் கடிதம் எழுதாவிட்டால், சரளாவுக்கு வேலை கொடுத்திருக்க மாட்டேன். கொடுத்திருந்தாலும் சிவராம் வேலையை இழக்கும் சந்தர்ப்பம் நேர்ந்திருக்காது!"

"ஏன் அங்கிருந்து இருவரையும் வேலையை விட்டுத் தள்ளி விட்டாய்? இவர்கள் மணந்து கொண்டால் பணம் வேண்டுமே? வேலையைத் திரும்பக் கொடு, அண்ணா!" என்று கெஞ்சினாள் சரளாவின் தாயார்.

"நீ கேட்காவிட்டாலும் வேலையைத் திரும்பக் கொடுக்கப் போகிறேன். திருமதி சரளா அவர்கள் ஆட்சேபணை சொல்லாமல் இருந்தால், மானேஜர் சிவராம் இனிமேல் நானூறு ரூபாய் சம்பளம் பெறப் போகிறார். சரளாவுக்குள்ள சம்பளம், நூறும் அவருக்கு உயர்கிறது. சரளாவுக்கு வேலை டிஸ்மிஸ். என்ன மிஸ் சரளா?"

"நான் மானேஜர் சம்பளத்தை ஆட்சேபிக்கிறேன்" என்றாள் சரளா.

சிவராம் திடுக்கிட்டான்.

"மாமா! மானேஜருக்குச் சம்பளம் நானூறு போதாது என்று ஆட்சேபிக்கிறேன்" என்றபோது எல்லோரும் சிரித்தார்கள்.


Arvind
QUALITY FABRICS
SANFORIZED
SHRUNK FABRIC
ஷர்ட்டிங்குகள்
பாப்ளின்கள்
கோட்டிங்குகள்
மற்றும்
பலரக கலர்
பிரிண்டுகள்!
அரவிந்த் மில்ஸ் லிட்.
அஹமதாபாத் - 2

# கடல் கண்ட கனவு

சோமு

## மூன்றாம் அத்தியாயம்

## நினைவின் அலைகள்

**வ**லம்புரித் தீவிலிருந்து மந்திரநாயகம் புறப்பட்டுச் சென்று இரண்டு வாரங்கள் கழித்து ஒரு நாள்.

வலம்புரி மகாராணியார் 'ஓலக்கம்' என்று சொல்லப்பட்ட தமது அரச மண்டபத்திலிருந்தபோது, இரண்டு காவலாளர்கள் பதறியடித்து ஓடி வந்தார்கள். சாதாரணமாக மகாராணியாரின் அரச மண்டபத்துக்குள்ளே காவலாளர்கள் அந்த மாதிரிப் பதறிக்கொண்டு ஓடி வருவது வழக்கமில்லை. அரசியாருக்கு இது வியப்பைக் கொடுத்ததோடு பதற்றமும் தந்தது. சிம்மாசனத்திலிருந்து எழுந்து விட்டார் அவர்.

''பேரரசியாரே! நமது தீவைச் சுற்றியுள்ள நீலக் கடலின் பரப்பிலே எதிர்பாராத விதமாக மரக்கலங்கள் சூழ்ந்து நிற்பது தெரிகிறது. நமது தளபதியை அரண்மனையின் மேல் மாடியிலேயுள்ள கூண்டிற்கு அனுப்பிப் பார்க்கும்படி பணிக்க வேண்டும்'' என்று சொல்லிய வண்ணம் கையும் காலும் பதறினார்கள், அந்தக் காவலாளர்கள். அவர்களுக்கு அதற்கு மேல் பேச்சு தடைப்பட்டது.



வலம்புரித் தீவின் நிர்வாகம் ஏற்கனவே கடந்த ஐம்பது ஆண்டுகளாக ஆட்டம் கொடுத்திருந்தது. சித்திராங்க பூபதி யாவது பட்டம் சூடி அரசாட்சியின் பீடத்தை நிலைப்படுத்துவான் என்று எல்லாரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் இளவரசனே பேரியாழை நாடி இப்பொழுது கடல் கடந்து சென்று விட்டான். அவனுடைய யாத்திரைக்குப் பிறகு அரசியார் வேறு வழியின்றி ராஜ்யத்தின் பொறுப்பை ஏற்றுக் கொண்டு ஒரு வகையாகச் சமாளிக்கலாம் என்று எண்ணினர். தவிரவும், வலம்புரித் தீவு தமிழ்நாட்டு அரசர்களின் கவனிப்பை இழந்து பல ஆண்டுகள் ஆகிவிட்டதால், அதன் ஆட்சியில் வேறு எவ்விதமான சிக்கல்களும் இல்லாமல் செங்கோல் சென்று கொண்டிருந்தது. கடினமான அரசியற் குழப்பங்கள், கஷ்டமான கட்சிப் பிணக்குகள், தீர்க்க தரிசனத்தோடு முடிவு காண வேண்டிய பெரும் பிரச்னைகள் - ஏதும் இன்றி வலம்புரித்தீவு ஏகாந்தமாகக் கடலிலே குளித்துக் கொண்டிருந்தது. இந்த நிலையில் இப்பொழுது இடிசென்று புதிர்கள் கிளம்பும் என அரசியார் எதிர்பார்க்கவில்லை. அன்று முத்தரையர்களின் தூதுவர் வந்து, தீக்கங்கைக் கொட்டுவது போல ஏதேதோ விவரங்களைச் சொன்னதும் அரசியாரின் மனம் துணுக்குற்றது உண்மைதான். தன்னுடைய மகனை அந்தக் குழப்பத்திலிருந்து மீட்டுக் கொண்டு வருவதற்கு மந்திர நாயகம் தமிழ் நாட்டுக்குச் சென்றால் ஒழிய வேறு வழி கிடையாது என்று அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. அதனால்தான் அந்தச் சந்தர்ப்பத்தில் மந்திரநாயகத்துக்கு விடைகொடுத்து அனுப்பினார் அரசியார். இல்லையென்றால், வலம்புரித் தீவு ஒரு படைக்கலப் பயிற்சிக் களமாக மாறுவதற்கு உடன்பட்டுள்ள அந்தச் சந்தர்ப்பத்தில் மந்திரநாயகம் நாட்டில் இல்லாமல் கடல்கடந்து செல்வதற்கு அவர் உடன்பட்டிருக்க மாட்டார். ஆனால் இப்பொழுதோ?




வலம்புரித் தீவைச் சுற்றி நின்ற மரக் கலங்கள் முத்தரையர்கள் தங்களுடைய பயிற்சிக்காக அனுப்பிய படைகளாக இருக்கக் கூடும் என்று முதலில் நினைத்தாள் அரசி. ஆனால் மறுகணமே மனத்தில் சந்தேகம் உதித்தது. மந்திரநாயகம் புறப்பட்டுச் சென்று இரண்டு வாரங்கள்தானே ஆகியிருந்தன. இந்தச் சிறிய காலத்துக்குள் மந்திர நாயகம் தஞ்சை சேர்ந்து, எல்லா விஷயங்களையும் பேசி முடித்து அதன் பயனாக அங்கிருந்து படைகள்! இங்கே வந்து சேர்வது என்பது முடிகிற காரியமா?–இப்படி எண்ணியதும் அரசியாருக்கு! மனத்துக்குள் 'பகீர்' என்றது. தளபதியை உடனே வரும்படி பணித்தார்.

''தளபதி!' **அஞ்சுவது அஞ்சாமை பேதைமை**' என்பது தமிழ் மறை. அதை மறந்துவிடக் கூடாது. சமர் என்று ஒன்று வந்து விட்டால் எல்லாருக்கும் முன்பாகப் படை நடத்திச் சென்று, வெற்றி அல்லது வீர மரணம் என்று நிற்கிற பரம்பரையிலே வந்த வீரர் குலத்துத் தமிழர்கள் நாம். என்றாலும் தமிழ் மறை கூறிய உண்மையை மறப்பது மடமையாகும். எந்த விஷயத்துக்குப் பயப்பட வேண்டுமோ அந்த விஷயத்துக்குப் பயந்துதான் ஆக வேண்டும். எதற்கும் அஞ்ச மாட்டோம் என்று கண் மூடித் தனமாக இருப்பதற்குப் பெயர் வீரம் அல்ல. வீரம் என்பது குருட்டு உணர்ச்சி யல்ல! வீரம் என்பது முட்டாள்த் தனமல்ல. அது அறிவோடு கூடிய ஆண்மை. எண்ணித் துணிந்து அதிலிருந்து உண்டாகிற ஆற்றலுணர்ச்சியே வீரம். அந்த வீரத்தை நம்முடைய படைத் தலைவர்களிடம் எப்பொழுதுமே நான் எதிர்பார்க்கிறேன். விஷப் புகை, வெடிமருந்து என்று புதிதாக ஏதோ சொன்னார்கள். வந்தது வரட்டும் என்று பேதைமையோடு இருந்து விட்டுப் பிறகு வாளை ஓங்கி நிற்பதில் அர்த்தமில்லை. நம்முடைய வலம்புரித் தீவுக்கு ஒரு பெருங் கேடு வருவதற்கு இருக்கிறது. கேட்டின் தன்மையை நன்றாக முன் யோசனையோடு ஆராய்ந்து பார்க்க வேண்டியது நமது கடமை. எனவே தளபதி என்ற பொறுப்போடு மந்திர நாயகம் என்ற பொறுப்பும் உமக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது. இன்று நமது தீவை வளைத்துள்ள படைகள் யாரிடமிருந்து எந்த நோக்கத்தோடு வந்திருக்கின்றன என்பதைத் தந்திரமாக



உணர்ந்து வர வேண்டியது உமது கடமை. அதை முதலிலே செய்ய வேண்டும் !''

இவ்வாறு பேசினர் அரசியார். தளபதிக்கு என்ன பதில் சொல்வது என்று ஒன்றும் ஓடவில்லை. உண்மையில் யுத்தம் என்று ஒன்று வந்தால் அதற்கான எவ்வித ஏற்பாடுகளும் அப்பொழுது வலம்புரித் தீவில் இல்லை! கடந்த பல ஆண்டுகளாக அந்தத் தீவு அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தது !

தளபதி அரசியாரைப் பார்த்து மௌனமாக நின்றார். அரசியார் மேலும் தொடர்ந்து சொல்லுவார் :—

'' தளபதி ! இன்று நம்மிடம் படை பலம் இல்லை என்பது உண்மை. இந்தத் தீவில் மாளிகைகள் நின்ற இடம் எல்லாம் மணலாகக் கிடக்கிறது. படைகள் நின்ற கோட்டைகளின் சுவர்கள் எல்லாம் கடற் காற்றின் உப்புக்கு இரையாகிவிட்டன ! கலை என்ற பெயரில் வீரத்தை மறந்து விட்டது இந்த அரசாட்சி. இதன் விளைவுகள் விபரீதமாக முடியும். அப்படிப்பட்ட விபரீதங்கள் நேராதவாறு இந்தத் தீவைக் காப்பாற்ற வேண்டியது நமது கடமை. ஆனால் ஓர் உண்மையை மறந்துவிடக் கூடாது. இன்று நம்முடைய தீவு இருக்கும் நிலையில் யார்தான் நம்மீது படையெடுத்து வருவார்கள் என்று எதிர் பார்ப்பதற்கில்லை. நமது தீவை ஒரு கேந்திர பூமியாக ஆக்கித் தங்களுடைய இரகசியப் படைகளுக்கு இரகசியமாகப் பயிற்சி அளிப்பதற்கு நம் ஒத்துழைப்பை இரு கட்சியாரும் நாடப் போகிறார்கள். நாமோ ஏற்கனவே முத்தரையர்களுக்கு வாக்குறுதி கொடுத்திருக்கிறோம். அத்தோடு பல்லவர் குலத்துக்கும் கடல் கடந்த தீவுகளுக்கும் உள்ள தொன்மையான உறவை நாம் ஒருநாளும் மறந்து விடுவதற்கில்லை. அதுமட்டுமில்லை, கொடும்பாளூர் வேளிர் குடும்பத்துக்கும் நமக்கும் உள்ள—''

இதற்குமேல் அரசியாரால் பேச முடியவில்லை. கொடும்பாளூர் வேளிர்கள் என்று சொல்ல ஆரம்பித்தாரோ இல்லையோ, அரசியாருடைய கண்களிலிருந்து ' பொல பொல ' என்று கண்ணீர் பொங்கி வழிய ஆரம்பித்தது. தளபதிக்கும் இதைக் கண்டதும் தமது உணர்ச்சிகளை அடக்க முடியவில்லை. இறந்த காலத்தின் நினைவுகள் எல்லாம், நீண்ட நாட்களாக உள்ளத்துக் குள்ளே சிறை வைக்கப் பட்டிருந்த அந்தத் துன்ப நினைவுகள் எல்லாம், தளபதியின் இதயத்தைப் பிளந்து கொண்டு மேல் எழுந்தன.

'' அரசியாரே ! எந்த ஒரு நினைவு நம் அனைவரையும் அளவற்ற துயரத்தில் ஆழ்த்துமோ, அந்த நினைவுக்கு இப்பொழுது இடம் கொடாதீர்கள். இத்தனை ஆண்டுகள் நாம் அனைவரும் நம்முடைய இளவரசர் பூபதிக்குத் தெரியாமல் இரகசியமாகக் காப்பாற்றி வந்த விவரத்தை இப்பொழுது வெளியிட்டுப் பேசுவது கூடத் தவறு. தயவுசெய்து அந்த நினைவை மறந்து விடுங்கள். இனி ஆகவேண்டிய காரியங்கள் யாவை என்பதை நானும் நம்முடைய மந்திரச் சுற்றமும் யோசித்து முடிவு காணுகிறோம். காவலாளிகள் சொல்லுவதைப் பார்த்தால் இந்த மரக்கலங்கள், பல்லவருக்கு எதிராகப் பாண்டி நாட்டிலே இருந்து வந்திருக்கக் கூடுமோ என்று சந்தேகிக்கிறேன். நாயகமான மரக்கலத்தின் உச்சியில் மீனக் கொடி பறப்பது போல் தெரிகிறது என்று நமது வீரர்கள் சொல்லுகிறார்கள். எதற்கும் ஆத்திரப் படாமல் பொறுத்துப் பார்க்கிறேன். பாண்டியர்கள் இந்தப் படையெடுப்பில் சம்பந்தப்பட்டிருந்தால், நிச்சயம் அவர்களுடைய தூதர் ஒருவர் முதலில் நமது அரண்மனைக்குள் வந்து தூது பேசாமல் மேற்கொண்டு நடவடிக்கைகள் எடுக்க மாட்டார்கள். எது எப்படியானாலும் செந்தமிழ் நாட்டார் யுத்த தர்மத்தைக் கைவிடக் கூடியவர்கள் அல்லர். பார்ப்போம் !''

இவ்வாறு சொல்லி அரசியிடம் விடை பெற்றுச் சென்றார் தளபதி. அவர் சென்று வெகு நேரம் ஆனபின்பும் அரசியார் தமது இருக்கையிலிருந்து எழவில்லை. கொடும்பாளூர் என்ற நினைப்பு அவருடைய உள்ளத்தில் தீ மூட்டியது. எத்தனையோ ஆண்டுகள் ஆகி விட்ட போதிலும் அந்தப் பழைய சம்பவம், அரசியாரின் வாழ்வையே பாதித்துவிட்ட அந்தச் சம்பவம், மீண்டும் உள்ளத்தைக் குமைத்தது. இதயத்தைச் சாறு பிழிந்து அந்த உணர்ச்சிச் சாற்றையெல்லாம் விழிகளிலே கொண்டுவந்து கண்ணீராகக் கொட்டியது அந்த நினைவு.

நீண்டநாழிகை நேரம் அப்படியே அமர்ந்திருந்தார் அரசியார். மாலை நேரம் நகர்ந்து, இரவுப் பொழுதும் ஆகி, வானத்தில் நிலவு உதித்த பிறகு அரசக் கட்டிலிலிருந்து எழுந்து அரண்மனையின் உப்பரிகைக்குச் சென்றார்.

அவரோடு நடந்து வந்த சேடியர்களையும், காவலாளர்களையும் ''நீங்கள் செல்லலாம்'' என்று உத்தரவிட்டு அனுப்பிவிட்டுத் தன்னந்தனியே படிகளிலே ஏறிச் சென்றார் அரசி. வலம்புரி அரண்மனையின் மேல் மாடிக் கோடியிலே கார்மேகக் கடலைக் கண் இமைக்காமல் பார்த்துக் கொண்டே விருந்த திறந்த நிலா முற்றத்துக்கு வந்து அதிலிருந்த பளிங்குக் கட்டிலிலே அமர்ந்தாள் அரசி. தொலைவில் சந்திரனின் நிலவில் கடலின் பரப்பிலே மரக்கலங்கள் மிதந்தன. அவற்றுக்கு மத்தியில் நாயகமாக நின்ற ஒரு பெரிய மரக்கலத்தில் உயரமான கோலும் அதில் கட்டிப் படர்ந்த கொடியும் தெரிந்தன. மீனக் கொடி. என்றார் அல்லவா தளபதி? மீனக் கொடியாகவே இருக்கக்கூடும். அதையே பார்த்தவாறு நின்றான். அந்தக் காலத்தில் கொடும்பாளூர் வேளிர்களுக்கும் பாண்டிய அரசர்களுக்கும் நெருங்கிய உறவு இருந்த நாளில் நடந்த சம்பவம் அது! அப்போது பல்லவர்களுக்கும் வேளிர்களுக்கும் பகையில்லை. நெருங்கிய நட்பு இருந்தது. பாண்டியர்களோ பல்லவர்களின் சம்பந்திகளாக விளங்கிய காலம் அது! வேளிர்களுங்கூடச் சில சமயம் மீனக்கொடி கட்டிக் கொண்டு பெரிய பெரிய மரக்கலங்களிலே வந்ததுண்டு! அதெல்லாம் ஒரு காலம்! அந்தக் காலத்திலேதான், அரசியாரின் உள்ளத்தை இத்தனை தூரம் துயரப்படுத்துகிற அந்தச் சம்பவம் நடந்தது! இப்பொழுது கடலின் பரப்பிலே மிதக்கும் மரக்கலங்களும், அந்த மீனக்கொடியும் அரசியின் கண்முன்னே அந்தப் பழைய சம்பவங்களையெல்லாம் அப்படி அப்படியே கொண்டு வந்து நிறுத்தின. கண்ணீர் பொங்கும் விழிகளுடன் கடலையே பார்த்துக் கொண்டிருந்த அரசியின் கண் முன்பு கடல் மறைந்து விட்டது. இறந்த காலத்தின் நினைவுகள் ஒன்றொன்றாக, அலைமேல் அலையாக எழுந்து வந்தன!

## நான்காம் அத்தியாயம்

# கேட்ட குரல்!

கடலை நோக்கியவாறு பூபதியின் அன்னை சிந்தனைக் கனவுகளிலே மிதந்து கொண்டிருந்த அதே இரவில், கொடும்பாளூர்க் குங்கும மாளிகையில் சித்திராங்க பூபதி சூழ்ச்சிச் சுழலிலே சிக்குண்டு தடுமாறினான்!

யாழ் நங்கையிடம் தனது இடமான நோக்கங்களைச் சொல்லிக் கொண்டிருந்த பூபதிக்கு, சித்தரின் வரவு திகைப்பைக் கொடுத்ததல்லவா? நங்கை அந்த இடத்திலிருந்து மின்னலின் வேகத்தில் மறைந்து விடவே, பூபதி படிம விலாசத்துக்கு வெளியே நடந்து வந்து, சித்தரை வரவேற்போமா, அல்லது அறைக்குள்ளேயே ஏதும் நடவாதது போல் கட்டிலிலே போய் அமர்ந்து கொள்வோமா என்று ஒரு விநாடி தயங்கினான். இந்தத் தயக்கத்துக்குள் குமிழ்க் கட்டை அறைக்குள்ளே நடை போட்டது!

''என்ன தம்பி! சௌக்கியமாக இருக்கிறாயா?'' என்று கேட்டுக் கொண்[illegible] யைக் காற்று வாக்கில் ஒரு சுழற்[illegible] னார் சித்தர். பூபதி அந்தச் சுழற்[illegible] போடு பார்த்தான்.



''பிசாசை விரட்டுகிற பிரம்பு[illegible] காற்று என்றால் பிசாசு என்று [illegible] தெரியுமா உனக்கு?'' என்றார் சித்தர். [illegible] மருண்டு மருண்டு பார்த்தான்.

''என்ன மருள்கிறாய்? எத்தனை பிசா[illegible] இங்கே நடமாடுகின்றன தெரியுமா உனக்[illegible] பாவம் நீ என்னத்தைக் கண்டாய்! [illegible] எப்போது புறப்படுகிறாய் இங்கே [illegible] அதைச் சொல்லு!'' என்று கேட்[illegible] கொண்டே சித்தர் ஏதோ காற்றிலே [illegible] பார்க்கிற மாதிரி திரும்பத் [illegible] வாங்கினார்.

''என்ன வாசனை! என்ன வாசனை! எங்கே யிருந்து வருகிறது இத்தனை வாசனை! எந்தப் பூங்கொடிக்கு இத்தனை வாசனை உண்டு! அடடா! இந்த அறை முழுதுமே பரிமளிக்கிறதே! என்ன ராஜகுமாரா? உனக்கு நக்கீரர் கதை தெரியுமா? தெரியாவிட்டால் தெரிந்து கொள். ஏனென்றால் நக்கீரர் சிவபெருமானோடு வாதிட்டதற்குக் காரணமே பாண்டிய அரசியினுடைய கூந்தலிலிருந்து வந்த வாசனை தான்! தெரியுமோ உனக்கு! அந்தக் கதையைக் கட்டாயம் தெரிந்துகொள். செந்தமிழ் மன்னர்களுடைய அந்தப்புரத்துக்குப் போவதற்குள் அந்தக் கதையைக் கேட்டுத் தெரிந்து கொள், அப்பனே!''

இப்படிச் சொல்லிவிட்டுச் 'சித்தன் போக்கு சிவன் போக்கு' என்ற முதுமொழிப்படி மேலே நடந்தார் அந்த விசித்திர சித்தர். பூபதிக்கு இப்பொழுது நிலை கொள்ளவில்லை. சித்தர் 'விறு விறு' என்று படிகளிலே இறங்கி மறைந்து விட்டார். பூபதி கட்டிலில் வந்து அமர்[illegible]

[illegible] கூந்தலிலிருந்து வந்த வாசனை [illegible]ப்பிட்டாரோ சித்தர்? அப்படி [illegible] [illegible]ந்த அறைக்கு வந்துபோனது [illegible]யுமோ? அப்படியானால் பாண்[illegible] அர[illegible]ந்தலைப் பற்றியும் நக்கீரரின் [illegible]றியும் ஏன் குறிப்பிட்டார்? [illegible]னரின் அந்தப்புரத்துக்குப் [illegible] அந்தக் கதையைத் தெரிந்து [illegible]ண்டும் என்று சொன்னாரே? யார் [illegible]து அரண்மனைக்குப் போகப் போகி[illegible]? ஒருவேளை தானே தான் போக வேண்[illegible] நேரிடுமோ? தான் ஏன் இந்தக் குங்கும மாளிகையிலிருந்து வெளியே செல்ல வேண்டும்? மன்னர்களின் அந்தப்புரத்துக்கும் [illegible] என்ன சம்பந்தம் வந்தது?'

இப்படி யெல்லாம் யோசித்த வண்ணம் அன்றைய இரவைக்கழித்தான் சித்திராங்கன்.

மறுநாள் மாலை மாளிகையில் இருந்தவர் யாரும் எங்கும் போகவில்லை. எல்லாரும் ஏதோ ஒரு முக்கிய விருந்துக்கு ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தார்கள் என்பது அங்கிருந்த பரபரப்பில் தெரிந்தது. அந்தப் பரபரப்பில் பூபதி தன்னுடைய அறையை விட்டு வெளியே வராமல் உள்ளேயே இருந்தான். அப்போது சாத்தன் என்ற அந்தச்செவிட்டுப் பணியாளன் உள்ளே வந்தான். வந்து ஒரு சிறு ஓலைச் சுருளைக் கொடுத்து விட்டுப் போனான்!

ஓலைச் சுருளை உலைத்துப் பார்த்தான் பூபதி! என்ன ஆச்சரியம்! அது யாழ் நங்கை அனுப்பிய நிருபம்! அன்றிரவு படிம விலாசத்துக்கு அப்பால் இருந்த மூன்றாவது அடுக்கில் உள்ள பெரிய அறையில் ஒரு முக்கியமான சதியாலோசனை நடக்கப் போவதாகவும், கட்டாயம் பூபதி தாமரைத் தகட்டுக்குப் பின்னால் நின்று முடிந்தவரை பேச்சுகளின் போக்கைக் கவனிக்க வேண்டும் என்றும் யாழ் நங்கை எழுதியிருந்தாள். எல்லாவற்றையும் விட அச்சம் விளைவித்த ஒரு செய்தி அதில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடப் பட்டிருந்தது:—

"கொடும்பாளூர் அரண்மனைக்கு என் அன்னை யாழ் வாசிக்கச் சென்றதிலும் ஒரு பெரிய சூழ்ச்சி இருந்திருக்கிறது. ஆதிரையார் என்ற அந்த உத்தமமான இளவரசரை இப்பொழுது சூழ்ச்சி வலைக்குள்ளே இழுத்துப் பிடித்து விட்டார்கள். அவரை ஏமாற்றுவதற்கு என்றே இந்த யாழ் வாசிப்புச் சூழ்ச்சி நடந்திருக்கிறது என்பதை எண்ணி எண்ணி மனம் வருந்துகிறேன். தேவதைகளை ஒலியின் வலையிலே மெய்யான பக்தியோடு கட்டிப் பிடிக்கிற ஒரு புனிதமான வாத்தியம் இப்பொழுது இப்படிச் சூழ்ச்சி வலைகளைப் பின்னுகிறது!"



இவ்வாறு எழுதியிருந்தாள் நங்கை. இதைப் படித்ததும் பூபதி மனம் நொந்து போனான். ஆனாலும் நங்கையின் யோசனைப்படி அந்தச் சூழ்ச்சிப் பேச்சின் சாரத்தைக் கவனிக்காமல் விடுவதில்லை என்றும் தீர்மானித்துக் கொண்டான்.

நடுநிசி யாயிற்று. படிம விலாசத்தின் தாமரைத் தகட்டை அசைத்துப் பார்த்தான். இடம் கொடுத்தது. ஆனால் சாத்தன் உள்ளே நின்றுகொண்டிருந்தான். சாத்தனைப் பார்த்ததும் 'இவன் நமக்கு உடந்தையானவன்' என்று ஒரு தைரியம் உண்டாயிற்று பூபதிக்கு. மறு விநாடி சாத்தன் கை சமிக்ஞையினால் அடுத்த அறையின் தாமரைத் தகட்டைச் சுட்டிக் காட்டினான். பூபதி சாத்தனுடைய குறிப்பை உணர்ந்து கொண்டான். அடுத்த அறைக்குச் செல்வதற்கும் இப்படி ஒரு இரகசிய வாசல் இருக்கும் விவரத்தைத் தனக்குத் தெரிவிப்பதற்காகவே நங்கை அவனை அனுப்பியிருக்கிறாள் என்பதைப் புரிந்து கொண்டான் பூபதி. மேலே நடந்து அந்த இரண்டாவது தகட்டையும் அசைத்தான். உள்ளே சென்றான்.

மூன்றாவது அறையில் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்தன. விடுதித் தலைவனுடைய குரல்தான் நன்றாகக் கேட்டது. வார்த்தைகள் தொடர்ச்சியாகக் கேட்கா விட்டாலும் பெரும்பாலும் கேட்டபடியால், பேச்சின் சாரத்தைக் கிரகித்துக் கொள்வதில் பூபதிக்குக் கஷ்டம் இருக்கவில்லை. விடுதித் தலைவன் பேசிய வார்த்தைகளின் சுருக்கம் வருமாறு:

சித்திரமாயனுக்குத் துணையாகவும், பல்லவர்களுக்கு எதிராகவும் ஒருமித்துப் போர் செய்யக்கூடிய தளபதிகளைப் பல இடங்களிலும் தேடிச் சென்றான் விடுதித் தலைவன். அவனுடைய இரகசிய ஏவலாளர்கள் தெற்கு மண்டலங்களில் பல தலைவர்களைப் போய்க் கண்டு பேசினார்கள்.

ஆனால் கொடும்பாளூர்க் கானகத்துக் கோவிலில் நடைபெற்ற இரகசியக் கூட்டம் உதயசந்திரனின் எதிர்பாராத பிரவேசத்தினால் கலைந்து விட்டது. கலைந்து விட்டதோடு இல்லை. சித்திரமாயனைத் தவிர மற்றவர்கள் எல்லாம் உதயசந்திரனுடைய வீரர்களால் பிடிக்கப்பட்டு விட்டார்கள். வல்லத்து அரசரை உதயசந்திரனே தனது குதிரையில் ஏற்றிக் கொண்டு சென்று விட்டான். இப்பொழுதுள்ள நிலைமை என்னவென்றால், தஞ்சை முத்தரையர்களும், வல்லத்தரசர்களும் பல்லவருக்குத் துணையாக உதயசந்திரனுக்கு உதவுகிறார்கள். இதைச் சமாளிப்பது கஷ்டம். பெரும் படை இருந்தால் ஒழிய எதிரிகளை வளைப்பது இயலாதகாரியம். உதயசந்திரனோ தந்திரத்துக்கு மேல் தந்திரமாகக் காரியம் செய்கிறான். இதை உத்தேசித்து விடுதித் தலைவன் ஒரு பெரிய சாமர்த்தியமான செயல் இப்பொழுது செய்திருக்கிறான். சித்திரமாயன் ஏற்கனவே சிம்மவிஷ்ணுவின் பரம்பரை மூலமாகப் பாண்டியர்களுக்கு நெருங்கிய உறவு உள்ளவன். எனவே அவனைப் பாண்டியர்களிடம் சரணம் புகும்படி அனுப்பியாய் விட்டது. பாண்டியர்களும் சித்திரமாயனுக்கு உதவி செய்வதாக வாக்களித்து விட்டார்கள். இந்த நிலையில் உதயசந்திரன் சற்றும் எதிர்பாராத விதமாக வலம்புரித் தீவுக்கு ஒரு தூது அனுப்பியிருக்கிறான். முத்தரையர்களின் அரசகுமாரியை வலம்புரி இளவரசனுக்குத் திருமணம் செய்து கொடுக்க விருப்பம் தெரிவித்து ஒரு பெரிய அரசியல் சூழ்ச்சி செய்திருக்கிறான் உதயசந்திரன். ஆனால் இந்தச் சூழ்ச்சியைக் கண்டுங்கூட விடுதித் தலைவன் மலைத்து விடுவானா? இல்லை. அவனும் ஒரு பெரிய தந்திரம் இப்பொழுது செய்திருக்கிறான். வலம்புரித் தீவுக்கு மீனக்கொடி பிடித்த மரக்கலத்தோடு ஒரு படை சென்றிருக்கிறது. ஆதியின்

பாண்டியர்களின் பெரு முயற்சியினால் உருவான வலம்புரித் தீவில் இன்று பல்லவர்கள் பாத்தியதை கொண்டாடுவதற்கு என்ன நியாயம்' இருக்கிறது என்பதைத் தெரிந்து விடவேண்டும். பல்லவர்களின் படைகள் வலம்புரித் தீவிலே இறங்குவதற்கு முன்பு சித்திரமாயனுடைய வீரர்கள் அந்தத் தீவை ஆக்கிரமித்து விடுவார்கள். வேளிர்கள் என்றால் வலம்புரித் தீவின் அரசியாருக்கு இதயத்தில் என்ன உணர்ச்சி ஏற்படும் என்பது விடுதித் தலைவனுக்கு நன்றாகத் தெரியும். எனவே வேளிர்களின் பிரதிநிதியே இப்பொழுது மரக்கலத்தில் சென்றிருக்கிறான்!''

இத்தனை விஷயங்களையும் தெரிந்து கொண்டான் பூபதி. மனத்துக்குள் அடக்க முடியாத



கோபம் பொங்கிக் கொண்டிருந்தது. அத்தனை கோபத்துக்கு மத்தியிலும் எல்லையற்ற ஓர் ஆவல் பூபதியின் உள்ளத்தில் ஓங்கி நின்றது. அந்த ஆவலை அவனால் கட்டுப்படுத்த முடியவில்லை. அவனையும் மீறி அவன் இதயம் ஆதிரையனை நாடித் துடித்தது! 'ஆதிரையன்' —அவன் அல்லவா வேளிர்களின் அரசகுமாரன்? அவன் என்ன ஆனான்? வேளிர்கள் என்றால் வலம்புரி அரசிக்கு ஏதோ ஓர் உணர்ச்சி உண்டாகும் என்றானே இந்தக் கயவன்! அது என்ன உணர்ச்சியாக இருக்கக்கூடும்? அந்த ஆதிரையன் இப்பொழுது எங்கே? ஒரு வேளை அவனைத்தான் வலம்புரித் தீவுக்கு அனுப்பியிருக்கிறானோ?! அட பாவமே! ஆதிரையன் எத்தனை நல்லவன்! அவனுமா இந்தச் சூழ்ச்சியில் அகப்பட்டுக் கொண்டான்? அப்படியானால் நான் இல்லாதபோது இந்தக் கயவர்கள் எல்லாம் சேர்ந்து தன்னுடைய தாய் நாட்டையும் தன் தாயையும் என்னென்ன குழப்பங்களுக்கெல்லாம் உள்ளாக்கப் போகிறார்களோ, தெரியவில்லையே!

இப்படி அவன் எண்ணமிட்டுத் துடி துடித்துக் கொண்டிருக்கும்போதே, திடீரென்று சாட்டை சுண்டிவரும் ஓசை கேட்டது. நீண்ட முறுக்குச் சுருளினால் கட்டப்பட்ட பொல்லாத சாட்டை யாருடைய உடம்பிலேயோ ஓங்கி ஓங்கி விழுகிறது. ஆனால் அந்த மனிதன் மெய்யான வீரனாக இருக்க வேண்டும்! சற்றும் கலங்காமல் மௌனமாக அந்த அடிகளை வாங்கிக் கொள்ளுகிறான். எவ்விதமான ஓலமும் இடவில்லை அவன்.

'' அடியுங்கள். ஏன் நிறுத்துகிறீர்கள்?''

இது விடுதித் தலைவனுடைய குரல். அந்த அறையிலே எதிரொலித்து வருகிறது! இங்கே பூபதியின் செவியில் நன்றாகக் கேட்கிறது.

'' அடியுங்கள்! இன்னும் அடியுங்கள். என்னுடைய உடம்பு சிதறுண்டு போகலாம். ஆனால் என் உறுதி சிதறாது!''

இப்படிச் சொல்லுகிறான் அடிபடுகிற அந்த வீரன். பாவம்! கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டார்கள் போலும். என்னென்னவோ மாயங்கள் செய்து அந்த வீரனை ஏமாற்றிப் பிடித்து வந்து விட்டார்கள் போலும்! ஆனாலும் அவனுடைய வீரத்தை நெஞ்சிலிருந்து ஓட்டி விட முடியுமா? எத்தனை கண்ணியமான குரல் அது! அதில் எத்தனை வீரம்! பூபதி அப்படியே உடல் பதறினான். யாருடைய குரல் அது? இதற்கு முன்பு கேட்ட குரல் அல்லவா அது? தனக்கு நன்றாகப் பழக்கப்பட்ட குரல் போல் அல்லவா இருக்கிறது அது?

பூபதி இப்படி நினைத்துப் பார்க்கும்போதே, மீண்டும் சாட்டை 'பளார் பளார்' என்று கேட்டது. பூபதிக்கு உடம்பெல்லாம் வியர்த்தது. பயத்தினால் அல்ல. எல்லை மீறிய ஆத்திரத்தினால்! பூபதிக்குக் கையும் காலும் துடித்தன. அச்சத்தினால் அல்ல. ஆவேசத்தினால்! தனக்கும் அந்தச் சதிகாரர் கூடியிருந்த அறைக்கும் நடுவே நின்ற சுவரை என்ன செய்வது? அதைப் பேர்த்துத் தகர்க்க முடியுமானால்? — இவ்வாறு எண்ணித் துடித்தான்.

துடிக்கிற கைகள் இரண்டையும் ஒன்றாகக் கோத்துக் கொண்டு நின்றான் சித்திராங்க பூபதி. இதொன்றையும் இலட்சியம் செய்யாத அந்தப் பொல்லாத முறுக்குச் சுருள் மீண்டும் மீண்டும் 'பளார் பளார்' என்று அந்த வீரனின் உடம்பிலே சுருண்டது. அந்த வீச்சு ஒவ்வொன்றும் பூபதியின் உள்ளத்திலே விழுந்தது. அந்தச் சாட்டையின் ஒவ்வொரு அறையும் இங்கே நின்ற சித்திராங்களின் உடம்பிலே விழுந்தது. அந்த வீரனைப் போலவே பூபதியும் கலங்க வில்லை. அவனுடைய உள்ளத்தில் கட்டுக் காவலை மீறிய ஆத்திரம் மாபெரும் சீற்றத்தோடு கூடிய வீரமாகப் பரிணமித்தது. அந்தச் சுவரையே ஊடுருவிக்கொண்டு பாய்ந்து விடுபவனைப் போல ஆவேசத்தோடு நின்றான் சித்திராங்க பூபதி. (தொடரும்)

'கடல் கண்ட கன'வின் கதாநாயகனான வலம்புரித் தீவின் இளவரசன் பூபதியையும், பேரியாழை மீட்டி இன்னிசை வழங்கி அவனை மயங்க வைத்த நங்கையையும் ஓவியர் மணியம் இவ்விதம் அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார்.



# மைக் கோயில்



**வீ**ரமும் தீரமும் செறிந்த பாஞ்சாலங் குறிச்சியைப் பார்க்க வேண்டுமென்று வெகு நாட்களாகவே ஆவல் கொண்டிருந்தேன். ஒரு நாள் நானும், எனது நண்பர்களும் பாஞ்சாலங் குறிச்சியைக் காணச் சென்றோம்.

தரை மட்டமாக இடிந்து கிடக்கும் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையைப் பார்த்தோம். சக்கம்மாள் கோயில், நீதி மன்றம், யானை கட்டுமிடம், குதிரை லாயம், கிணறுகள் முதலான பாழடைந்த இடங்களை யெல்லாம் காணும்போது வீர பாண்டியனின் பெருமையும், தமிழ் நாட்டின் பழம் பண்பாடும் எங்கள் நினைவுக்கு வரலாயின. ஆனால் அதே சமயத்தில் அளவிலா ஆத்திரமும், சோகமும் எங்கள் உள்ள உணர்ச்சிகளைச் சோர்வடையச்செய்தன.

மானபரன், பாஞ்சால நவாபு, தென்னாட்டுச் சிங்கம் என்றெல்லாம் புகழப் பெற்ற வீரனின் அரணை இத்தகைய அவல நிலைக்குள்ளாக்கி விட்டது ஆங்கில ஏகாதிபத்தியம்! காகமும் பறக்கத் துணியாத கட்ட பொம்மனின் கோட்டையை மண்ணாக்கி விட்டனர்!

பார்க்க வேண்டிய இடங்களை யெல்லாம் பார்த்த பின்னர் கோட்டைக்குச் சற்றுத் தூரத்திலுள்ள தோட்டத்துக்குச் சென்றோம். தோட்டம் இரு பிரிவுகளாகப் பிரிந்திருந்தது. ஒரு புறம் காய்கறித் தோட்ட





மும், மறுபுறம் பூஞ்சோலையும், மத்தியில் சற்று மேடான இடத்தில் கிணறும் காணப்பட்டன. கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துப் பருகினோம். தண்ணீர் குளிர்ந்து இளநீர் போல் இனிமையாகவும் இருந்தது. கிணற்றின் பக்கத்திலுள்ள பாறையின் மேல் களைப்புத் தீரச் சாய்ந்தோம். கிணற்றின் பக்கத்திலிருக்கும் குளுமையும், அங்கு வீசும் தென்றல் காற்றும் சேர்ந்து, எங்களை மெய்மறக்கச் செய்தன.

தென்றலில் மிதந்து வந்த வளையல்களின் மெல்லோசை கேட்டுக் கண் விழித்தேன். இலைச் சருகுகளின் சலசலப்பும், வளையலின் ஓசையும் நன்றாகக் கேட்டன. திரும்பிப் பார்த்தேன். அழகான ஒரு பெண் தன் தளிர்க்கரங்களினால் மலர்களைக் கொய்து பூக்குடலையில் போட்டுக் கொண்டிருந்தாள். யார் இந்தப் பெண்? வனதேவதையைப் போல் அல்லவா காட்சி யளிக்கிறாள்! அழகும், இளமையும் ஒருங்கே அமைந்து சௌந்தரிய தேவதையாக விளங்கினாள் அவள்! மாலையின் மஞ்சள் வெயிலில் அவளுடைய மேனி தங்கக் கொடி போல் மின்னியது. 'இந்தத் தோட்டத்தின் சொந்தக்காரியாக இருக்கலாம்! யாராயிருந்தா லென்ன? கேட்டுத்தான் பார்ப்போமே' என்று தைரியமாக அவள் எதிரே போய் நின்று கொண்டு, ''யாரம்மா நீங்கள்?'' என்று கேட்டேன்.

அந்தப் பெண் திடுக்கிட்டவளாய், ''நானா! நான்..நான்..நான் இந்த..'' என்று தயங்கினாள்.

''இந்தத் தோட்டத்தின் சொந்தக்காரர்களோ? நானும் அப்படித்தான் ஊகித்தேன்.''

''இல்லை, இல்லை! இந்தப் பக்கத்தில் வசிப்பவள்! நீங்கள் கோட்டையைப் பார்க்க வந்திருக்கிறீர்களோ?''

''ஆமாம்!''

''எல்லாம் பார்த்து விட்டீர்களா?''

''பார்த்துப் பரவசமடைய என்ன வைத்திருக்கிறார்கள் ஆங்கிலேயர்கள்? பாஞ்சாலங் குறிச்சியைப் பார்க்க வேண்டுமென்ற ஆவலினால் வந்தோம். ஆனால் இங்கு வந்து கோட்டையின் அவல நிலையைக் காணும்போது ஏன் வந்தோம் என்றாகி விட்டது! சரித்திர சம்பந்தமான ஒரு இடமாவது நல்ல



நிலையில் இருக்கிறதா?'' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டேன்.

''ஏன் இல்லே? எல்லாம் இருக்கிறது'' என்றாள் பெருமையோடு.

''என்ன இருக்கிறது? அந்த இடிந்த இடங்களைப் பார்த்து விட்டோமே!''

''இல்லே, அந்த இடிந்த இடங்களை அல்ல நான் சொல்வது. சரித்திர சம்பந்தமான சில இடங்கள் இருக்கின்றன! அந்த இடங்களுக்குப் போகும் பாதை ஒருவருக்குமே தெரியாது! சுரங்க மார்க்கமாகச் செல்ல வேண்டும்!''

நான் ஆச்சரியத்தோடு, ''என்ன! என்ன! சுரங்க மார்க்கமா? அது எங்கே இருக்கிறது? அந்தச் சுரங்கப் பாதை உங்களுக்குத் தெரியுமா? என்னை அந்த இடங்களுக்கு அழைத்துச் செல்கிறீர்களா?'' என்றேன் ஆவலோடு.

என் ஆவலையறிந்த அந்தப் பெண் வாய்விட்டே சிரித்து விட்டாள்! ஆகா! அந்தச் சிரிப்பின் அழகுதான் என்ன? அங்கு தோட்டத்தில் இருக்கும் முல்லை அரும்புகளை நிகர்க்கும்படி அவள் பல் வரிசை அமைந்திருந்தது.

''என் பின்னாலேயே வாருங்கள். காட்டுகிறேன்!'' என்றாள் அவள்.

அவள் பூக்குடலையைக் கையில் ஏந்தியவாறு நடந்தாள். அவள் காலில் அணிந்திருந்த பாதசரம் 'ஜண், ஜண்' என்று ஒலித்துக் கொண்டிருந்தது. நான் மௌனமாக அவளைப் பின் தொடரலானேன். சற்று முன்பு நாங்கள் கண்ட அதே வழியாகப் போய்க் கொண்டிருந்தாள். கடைசியில் இருக்கும் ஒரு தூர்த்துப் போன கிணற்றின் அருகில் நின்றாள். என்னைப் பார்த்து, ''இதோ இந்தக் கிணற்றினுள்தான் சுரங்கப் பாதை செல்கிறது. பயப்படாமல் என் பின்னாலேயே வாருங்கள்!'' என்று சொல்லிக் கொண்டே கிணற்றினுள் ளிருந்த அகல வட்ட வடிவமான கல்லை அகற்றினாள் அவள்! அதனுள் படிக்கட்டுகள் மங்கலாகத் தெரிந்தன. அந்தப் படிகளின் வழியாக இறங்கினாள். அழகே உருவமான ஒரு இளம் பெண் சிறிதும் பயமின்றித் தட்டுத் தடுமாறாமல் போகும்போது நான் பயந்தவாறு காட்டிக் கொள்ளலாமா? என் இதயம் 'திக் திக்' என்று அடித்துக் கொண்டாலும், தைரியமாக அவளைப் பின் தொடர்ந்தேன். படிகளில் இறங்க, இறங்க ஒரே இருட்டாக இருந்தது. படிகள் முடிந்து சமதரைக்கு வந்த பின்னர் வெளிச்சம் தெரிந்தது. ஆங்காங்கு மாடங்களில் அகல் விளக்குகள் பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தன.

அந்த எழிலரசி பூக்குடலையை மாடத்தில் வைத்துவிட்டுப் புன்னகை தவழும் முகத்தோடு, ''இதுதான் வீரபாண்டியக் கட்டபொம்மனின் பாதாள இல்லம்! நீங்கள் இங்கே சரித்திர சம்பந்தமான இடங்களைக் காணலாம்!'' என்று சொல்லிக் கொண்டே, ஒரு குத்து விளக்கை எடுத்துக் கொண்டு வந்தாள். நாலடி முன்னுக்கு நடந்து விளக்கைச் சுவரின் அருகில் மேலாகத் தூக்கி, ''இந்தச் சுவரிலுள்ள சித்திரங்களைப் பாருங்கள்! இந்தப் பெரிய படம் வீரபாண்டியரின் தந்தையான திக்விஜய நாயக்கருடையது! அடுத்த படம் தான் நம் பெருமை வாய்ந்த வீர பாண்டியக் கட்டபொம்ம நாயக்கருடையது! பக்கத்திலுள்ளது அவருடைய மனையாள் வீர சக்கமாதேவியாருடையது. இவர்தான் ஊமைத்துரை! இவர் துரைசிங்கம்!'' என்றாள்.



இவ்வாறு அரச குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரின் பெயரையும் சொல்லிக் கொண்டே போனாள். குத்துவிளக்கின் வெளிச்சத்தில் சித்திரங்கள் 'பளபள'வென்று மின்னின!

நான் திகைப்போடு, ''இந்தச் சித்திரங்கள் இங்கு எப்படி வந்தன?'' என்று கேட்டேன்.

''இந்தச் சித்திரங்கள் அரசரின் அரங்க மாளிகையில் இருந்தவை! வெள்ளையருக்கும், பாஞ்சாலங் குறிச்சியாருக்கும், போர் மூண்டபோது, இந்தச் சித்திரங்களையும், இன்னும் சில விலை உயர்ந்த பொருள்களையும் இங்கு



பத்திரப்படுத்தினார்கள்'' என்று கூறி விட்டு அவள் என்னையும் அழைத்துக் கொண்டு நகர்ந்தாள்.

அங்கொரு இடத்தில் வட்ட வடிவமான நிலாக்கோலத்தில் அழகான கோயில் இருந்தது. கோயிலுக்குள் சிற்ப வேலைப்பாடமைந்த கல்மண்டபம்; அதன்மேல் பளிங்குக் கல்லால் செய்த தேவியின் விக்கிரகம்! இரு புறங்களிலும் குத்து விளக்குகள்; மேலே தீப வரிசைகளும் பிரகாசமாக ஒளிவிட்டு எரிந்து கொண்டிருந்தன!

''இதுதான் பாதாள சக்கமாதேவியின் ஆலயம்! கட்டபொம்ம நாயக்கரின் காலத்தில் இங்கு ஒவ்வொரு கடைசி வெள்ளிக் கிழமையிலும் விசேஷ பூஜைகள் நடைபெறும்! அரசரும், அரசியாரும் சக்கம்மாளுக்கு அர்ச்சனை செய்வார்கள்! அதன் பின்னர் நூற்றைம்பத்தைந்து ஆண்டுகளாக நாங்கள் சக்கமாதேவியின் திருப்பணியைச் செய்து கொண்டு வருகிறோம்!'' என்று கூறினாள்.

அதுவரை அவள் சொன்னதையெல்லாம் மந்திரத்தில் கட்டுண்டவன்போல் கேட்டு வந்தேன். ஆனால் அவள், ''நூற்றைம்பத்தைந்து ஆண்டுகளாக'' என்று சொன்னது என் திகைப்பை அதிகப் படுத்தியது. என் மனத்தில் தோன்றிய சந்தேகத்தைக் கேட்டு விட்டேன். ''அம்மா! உங்களைப் பார்த்தால் பதினெட்டு வயதுப் பருவ மங்கையாகத் தோற்றமளிக்கிறீர்கள்! நூற்றைம்பத்தைந்து ஆண்டுகளாகச் சக்கமாதேவியின் திருப்பணியில் ஈடுபட்டிருப்பதாகச் சொல்லுகிறீர்களே! இதை எப்படி நம்புவது?'' என்றேன்.

''உங்கள் மனத்தில் தோன்றியுள்ள ஐயத்தை அகற்ற என் வரலாற்றைச் சொல்கிறேன்! ஏறக்குறைய நூற்றைம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர் நடந்த சம்பவம்!'' என்று பூர்வ பீடிகையுடன் அம்மன் சந்நிதிக்கு முன்பாக உட்கார்ந்து கொண்டு பூக்களைத் தொடுத்தவாறே சொல்ல ஆரம்பித்தாள்:

வசந்த காலம் ஆரம்பமாயிற்று. மாந்துளிரைச் சுவைத்த குயில்கள் மதுர கீதம் பொழிய ஆரம்பித்தன. மன்னர் வீரபாண்டியக் கட்டபொம்ம நாயக்கரின் மனத்தில் இன்பநினைவுகள் தோன்றலாயின. வழக்கம் போல் மன்னரும், மகாராணி வீரசக்கமா தேவியாரும் பரிவாரங்களோடு சாலிகுளம் சாரலுக்குப் பயணமாயினர். மகாராணியாரின் அபிமானம் பெற்ற தோழியருள் நானும் ஒருத்தி. ராணியாரின் பூஜைக்காக மலர்களைச் சேகரிப்பதும், மாலைகளைத் தொடுப்பதும் என் முக்கியமான வேலை.

ஒருநாள் மாலை மன்னரும், மகாராணியாரும் தாமரைத் தடாகத்தின் அருகில் அமர்ந்து, பேசிக் கொண்டிருந்தனர்.

நானும் இரண்டொரு தோழியரும் பூஞ்சோலையின் முன்புறம் பேசிக் கொண்டிருந்தோம். சோலையோரத்தில் குதிரையின் குளம்புச் சத்தம் கேட்கலாயிற்று. திரும்பிப் பார்த்தேன். குதிரை மீதொரு வீரன் வேகமாக வந்து கொண்டிருந்தான். அவன் சோலைக்குள் வந்ததும், மரத்தடியில் குதிரையை நிறுத்தி விட்டு, எங்களருகில் வந்தான்.

''மகாராஜா இங்கேதான் இருக்கிறாரா?'' என்று கேட்டார்.

''ஆமாம்! நீங்கள் யார்?'' என்றேன்.

''நான் பாஞ்சாலங் குறிச்சியிலிருந்து வருகிறேன்! அவசரமான காரியம்! உடனே அரசரைப் பார்க்கவேண்டும்!''

''இங்கேயே இருங்கள்! நான் அரசரின் அனுமதி பெற்று வருகிறேன்!'' என்று சொல்லி விட்டுப் பூங்காவுக்குள் விரைந்தேன். அரசரிடம் விஷயத்தைச் சொன்னதும், உடனே அந்த வீரனை அழைத்து வரும்படி உத்தரவிட்டார். நான் ஓடோடி வந்து அரசரின் அனுமதியை வாலிபனிடம் தெரிவித்தேன். என்னைப் பார்த்துப் புன்னகை பூத்தவாறே, என்னைப் பின்தொடர்ந்தான் வீரன். அரசர் இருக்கும் இடத்தைக் காண்பித்து, நான் சற்றுத் தூரத்திலேயே நின்று விட்டேன்.



பாஞ்சை வீரன் அரசருக்கு வணக்கம் செலுத்தி ஒரு ஓலையைப் பணிவுடன் அரசரிடம் கொடுத்தான். ஓலையைக் கண்ட பின்னர் அரசர் மிகவும் கலக்க முற்றார். கோபமும், திகைப்பும் அவருடைய முகத்தில் பிரதிபலித்தன.

மன்னரும், ராணியாரும் வசந்த மாளிகைக்குச் சென்றனர். மறுநாளே, பாஞ்சாலங்குறிச்சிக்குப் பயணமாவதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யுமாறு அரசர் உத்தரவிட்டார்.

பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்த பின்னர் விஷயம் தெரிய வந்தது. அரசர் ஊரில்லாத நேரத்தில் தானுபதிப் பிள்ளை, ஸ்ரீவைகுண்டத்தில் உள்ள கும்பினியாரின் நெல்லைக் கொள்ளையடித்தாராம்! அது மட்டுமல்ல! இவர்களை எதிர்த்த நெற்களஞ்சியக் காவலாளியையும் கொலை செய்ய நேர்ந்ததாம்!

மானபரனை கட்ட பொம்மேந்திரனின் மதிமந்திரி இவ்வாறு ஈனமாக நடந்து கொண்டால் மன்னருக்கு எத்தகைய அவமானம்! தானுபதியின் செயலுக்கு வேந்தர் மிகவும் நொந்தார். கும்பினியாரின் சார்பில் வந்த பிர்கெட் துரையிடம் நெல்லின் விலையையும், அபராதத் தொகையையும் செலுத்தினர் அரசர். ஆனால் சீமைத்துரைகள் அதோடு திருப்தி யடைந்து விடவில்லை. ஸ்ரீவைகுண்டத்தில் நடந்த கொலைக்கு ஈடாகத் தானுபதியை உயிருடன் தம் வசம் ஒப்புவிக்குமாறு கோரினர்! ஆனால் வீரபாண்டியக் கட்டபொம்மன் அதற்குச் சிறிதும் இசையவில்லை.

அன்றொரு நாள் பூஜைக்காக நந்தவனத்தில் பூக்கொய்து கொண்டிருந்தேன். என் பின்னால் யாரோ நிற்கிறதாக உணர்ந்த நான் திரும்பிப் பார்த்து, "யாரது?" என்றேன்.

"என்னைத் தெரியவில்லையா? அன்று குளிர் பூங்காவுக்குச் செய்தி கொண்டு வந்தவனல்லவா நான்!" என்றார்.

"ஓகோ! நீங்களா! இங்கு எதற்காக வந்தீர்கள்?"

"உன்னைப் பார்க்க வந்தேன்!"

"என்ன! என்னைப் பார்க்கவா? பெண்கள் தனியாக இருக்குமிடத்துக்கு வரலாமா?" என்றேன் கோபத்துடன்.

"வரக்கூடாதுதான்; ஆனால் உன்னைக் குளிர் பூஞ்சோலையில் கண்ட போதே, என் உள்ளத்தை உன்னிடம் பறி கொடுத்து விட்டேன்! அன்றிலிருந்து உன்னைப்பார்க்கத் துடிதுடித்துக்கொண்டிருக்கிறேன்! இன்று எதிர்பாராத விதமாய் உன்னைப் பார்க்க நேர்ந்தது!"

என் உள்ளக்கிடக்கையை அவரிடம் நான் கூறவில்லை. என்ன அதிசயம்! வசந்த பூங்காவில் அவரைப் பார்த்ததிலிருந்து அவ் வீரனின் வசீகரத் தோற்றம் என் இதயத்திலிருந்து அகலாமல் பதிந்து விட்டிருந்தது! இன்று அவர் கூறும் அன்பு மொழிகள், அவருடைய உள்ளத்துடிப்பை வெளியிட்டன! இருவர் உள்ளங்களிலும், ஒரே நேரத்தில் ஒன்றுபட்ட எண்ணங்கள் மலர்ந்தன.

"உன் மலர்ந்த முகத்தைப் பார்த்துப் பூரிப்படைந்தேன்! உன்னுடைய பெயர் என்ன?" என்று கேட்டார்.

"என் பெயர் பங்காரு!" என்று நான் தரையை நோக்கியவாறே கூறினேன்.

"பங்காரு! ஆகா! எவ்வளவு பொருத்தமான பெயர்! சரி,வரட்டுமா?" என்று சொல்லிப் போகப் புறப்பட்டார் அவர்.

"கொஞ்சம் நில்லுங்கள்! உங்கள் பெயர் சொல்லவில்லையே!"

"ரங்கமன்னார் நாயக்கர்! பங்காரு உன்னை மறுபடியும் எங்கு எப்பொழுது பார்க்கலாம்?"

"வெள்ளிக்கிழமைதோறும் இந்த நந்தவனத்திலேயே பார்க்கலாம்!"

"சரி, அடுத்த வெள்ளியன்று கட்டாயம் வருவேன்!" என்றார் அவர்.

அதன் பின்னர் பல வெள்ளிக்கிழமைகளிலும் நாங்கள் நந்தவனத்தில் சந்

திக்கலானோம். எங்கள் இருவர் உள்ளங்களிலும் அன்புவேரூன்றி வளரலாயிற்று.

நான்கு மாதங்கள் கழிந்தன. பாஞ்சாலங் குறிச்சி அரசியலில் பெரும் புயல் வீசத் தொடங்கியது.

இந்தச் சமயத்தில் ரங்கமன்னார் நந்தவனத்தின் பக்கம் வருவது குறைந்து விட்டது. பாஞ்சாலங்குறிச்சி வீரர்கள் அல்லும் பகலும் போர்ப் பயிற்சியிலேயே கண்ணுங் கருத்துமாயிருந்தனர்.

கோட்டைக்குள் ஒரே பரபரப்பு! முன்னறிவிப்பில்லாமல் திடீரென்று நள்ளிரவில், வெள்ளையர்கள் முற்றுகை யிடுவார்களென்று எதிர்பார்க்கவில்லை பாஞ்சாலங்குறிச்சியார்.

இன்னும் நன்றாக விடியவில்லை. நான் வழக்கம் போல் பூப்பறிக்க நந்தவனத்துக்குச் சென்றேன். என் கைகள் மலர்களைப் பறித்துக் கொண்டிருந்தாலும், மனம் என்னவோ, சிந்தனையில் ஆழ்ந்திருந்தது. ''பங்காரு!'' என்ற குரல் என் சிந்தனையைக் கலைத்தது. என் ஆனந்தத்துக்கு அளவில்லை. எத்தனை நாளைக்குப் பிறகு ரங்கமன்னார் நாயக்கரைப் பார்க்கிறேன்!

அவர் என் கரத்தை இறுகப் பிடித்துக் கொண்டார். எல்லையில்லா இன்பத்தில் மிதந்தது என் உள்ளம். அவர் ஆசையோடு, ''பங்காரு! வீண் சந்தேகங்களுக்கு இடம் கொடுக்கக் கூடாதென்று நான் இங்கு வருவதை நிறுத்திக் கொண்டேன். தற்போது கட்டு திட்டங்களும் அதிகமாகி விட்டிருக்கின்றன. நடைபெறப்போகும் போர் முடிகிறவரையில் நாம் காத்திருக்க வேண்டும். என் தாய் நாட்டுக்கு நான் சூட்டும் வெற்றி மாலையே, உன் கழுத்தில் மண மாலையாக மாறும்! வெற்றி நமக்குக் கிட்டிய பிறகு என் தோள் வலிமைக்குப் பரிசாக உன்னைப் பெறுகிறேன்! அல்லது போர்க்களத்தில் வீர சுவர்க்கம் எய்தினால் அமர உலகில் உனக்காகக் காத்திருப்பேன்! இது நிச்சயம்! நேரமாகிறது. நான் போய் வருகிறேன்!'' என்று கூறிவிடைபெற்றுக்கொண்டார்.

எனக்கு வாக்களித்தபடியே ரங்கமன்னார், இடைவிடாமல் அன்று மாலைவரை நடந்த போரில் தம் தாய்நாட்டின் உரிமைக்காகக் கடைசி மூச்சுள்ளவரையில் போரிட்டு வெள்ளையர்களை வீழ்த்தினார். அவர் நினைத்தவாறு அன்று பாஞ்சாலங்குறிச்சியாருக்கே வெற்றி! காலன்துரை, வெள்ளையத் தேவனின் ஈட்டிக்குப் பலியானான். பாஞ்சாலங் குறிச்சியாரின் வேல் வீச்சுக்குத் தாளாமல் பரங்கியர் கூட்டம் பின்வாங்கியது.

ரங்கமன்னார் யுத்த பூமியில் வீர சுவர்க்கமடைந்ததாகத் தோழி அறிவித்



''கல்கி'' ஆபீஸ் காஷியர் ஸ்ரீ பி.ப. பார்த்தசாரதி அய்யங்கார் குமாரர் சிரஞ்சீவி பி.ப. கிருஷ்ணசாமிக்கும், தென்னிந்திய ரயில்வே டிஸ்டிரிக்ட் கண்ட்ரோலர் ஆப் ஸ்டோர்ஸ் ஆபீஸ் ஹெட் கிளார்க் ஸ்ரீ அ. சீனிவாச ராகவாச்சாரியார் குமாரத்தி சௌ. ஜெயலக்ஷ்மிக்கும் சமீபத்தில் சென்னையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. திருமணத்துக்குப் பல பிரமுகர்களிடமிருந்து பரிசுகளும் வாழ்த்துச் செய்திகளும் வந்தன. வாழ்க, மணமக்கள்!

தாள்! ''போர்க்களத்தில் வீரசுவர்க்கமடைந்தால் அமர உலகில் உனக்காகக் காத்திருப்பேன்!'' என்று அவர் என்னிடம் மொழிந்த வீரமுழக்கம் என் காதில் ரீங்காரம் செய்தது! நான் ஓடோடிப் பாதாளக் கோயிலுக்கு வந்தேன். என்னை என் காதலரிடம் சேர்க்கும்படிமுறையிட்டவாறே சக்கமாதேவியின் காலடியில் வீழ்ந்தேன். தேவி என் முறையீட்டுக்குச் செவி சாய்த்தாள்!

அன்றிலிருந்து, ரங்கமன்னாரும், நானும் இந்தப் பாதாளக் கோயிலில் தேவியாரின் திருப்பணியில் வாழ்ந்து வருகிறோம்!

கதை முடிந்தது. அவள் தொடுத்துக் கொண்டிருந்த பூச்சரம் மாலையாக உருப்பெற்றது. மாலையைச் சக்கமா தேவிக்கு அணிவித்தாள். ''பங்காரு! பூஜைக்கு எல்லாம் தயாராகி விட்டதா?'' என்ற புதிய குரலைக் கேட்டுத் திரும்பினேன்.

''அதோ அவரும் வந்து விட்டார்!'' என்றாள் அந்த வனமோகினி.

அவர்தான் ரங்கமன்னார் என்று நான் ஊகிக்க அதிக நேரம் பிடிக்கவில்லை. என்னையறியாமலேயே என் வாய், ''பங்காரு, ரங்கமன்னார் அமர காதலர்கள்!'' என்று முணுமுணுத்தது.

''ஏய்! யாருடா ரங்கமன்னாரும், பங்காருவும்? என்ன உளறுகிறாய்? எழுந்திரு சீக்கிரம்!'' என்ற என் நண்பர்களின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தேன்.






தமிழ் இலக்கியத்தில் நாவல், சிறுகதை ஆகிய இரு துறைகளிலும் சிறப்பாகத் தொடர்ந்து சேவை செய்து வாசகர்களுக்குச் சுவைமிக்க எழுத்தோவியங்களைப் பல ஆண்டுகளாக அளித்து வந்திருக்கும் பெருமை ஆனந்த விகடனுக்கு உண்டு.

தமிழ் நாட்டு எழுத்தாளர்களுக்கு ஊக்க மூட்டி அவர்கள் கற்பனைத் திறனை மேலும் ஒளிவீசச் செய்யவும், தமிழ்ப் பண்பும் இதர சிறப்பியல்புகளும் கொண்ட நல்ல நவீனங்களையும், சிறு கதைகளையும் தமிழ் மக்களுக்கு "விகடன்" வாயிலாக அளித்துவரவும், இதற்கு முன் கண்டிராத மிகப் பெரிய அளவிலே இந்த நாவல் போட்டியும் சிறுகதைப் போட்டியும் அறிவிக்கப்படுகின்றன.

# நாவல்

இந்தப் போட்டிக்கு வரும் நாவல்களில் மிகச் சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்படும் நவீனத்திற்கு ரூ. 10,000 பரிசு வழங்கப்படும்.

நாவல் போட்டிக்கு அனுப்பப் பெறும் நாவல்கள் மொழி பெயர்ப்பாகவோ, தழுவலாகவோ இராமல், சொந்த மனோதர்மத்தைக் கொண்டு எழுதப்பட்டதாக இருக்கவேண்டும்.

ஆனந்த விகடனில் ஏறக்குறைய 500 பக்கங்கள் கொண்டதாக இருக்கலாம்.

இந்தப் போட்டிக்கு அனுப்பப்படும் நாவல்களின் கையெழுத்துப் பிரதிகள் 1957-ம் வருஷம் ஏப்ரல் 30உக்குள் விகடன் காரியாலயத்தில் கிடைக்க வேண்டும்.

இந்தப் போட்டிக்கென அனுப்பப்பட்ட நாவல்களில் பரிசு பெறுதலைகளில் பிரசுரத்திற்கு உகந்தவை என்று கருதப்படும் இதர நாவல்களும் "விகட"னில் வெளியிட ஏற்றுக்கொள்ளப்படும். அவ்வாறு ஏற்றுக்கொள்ளப்பட்ட நாவல்களில் ஒவ்வொன்றுக்கும் ரூ. 2,000 சன்மானம் அளிக்கப்படும்.




இந்தப் போட்டிகளுக்கு அனுப்பப்பெறும் நாவல்களையும் சிறுகதைகளையும் கீழ்க்கண்ட பஞ்சாயத்தார்கள் பரிசீலனை செய்து பரிசுக்கு உகந்தவற்றைத் தேர்ந்தெடுப்பார்கள்.

# சிறு கதை . . . . .

இந்தப் போட்டியில் மிகச் சிறந்த தெனத் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு சிறு கதைக்கு முதல் பரிசு ரூ. 1000-மும், அதற்கு அடுத்த சிறு கதைக்கு இரண்டாம் பரிசு ரூ. 500-ம், மூன்றும் பரிசாகப் பதினைந்து கதைகளுக்கு ரூ. 100 விதமும் பரிசுகள் அளிக்கப் படும்.

"விகட"னில் 16 பக்கங்களுக்கு மேற்படாத அளவில் கதைகள் அமைய வேண்டும்.

ஒரே எழுத்தாளர் இந்தப் போட்டிக்கு ஒன்றுக்கு மேற்பட்ட கதைகளையும் அனுப்பலாம்.

இந்தப் போட்டிக்கு அனுப்பப்படும் கதைகள் 1956 அக்டோபர் 15-ம் தேதிக்குள் ஆனந்த விகடன் காரியாலயத்தில் கிடைக்க வேண்டும்.

இந்தப் போட்டிகள் பற்றிய இதர விவரங்களை ஆனந்த விகடன் 29—7—56 இதழில் பார்க்கவும்.



**ஸ்ரீ பி. வி. ராஜமன்னர்**
*பிரதம நீதிபதி, சென்னை*

**ஸ்ரீ வி. சுப்ரமணியம்**
*கல்வி அமைச்சர், சென்னை*

**ஸ்ரீ மு. வரதராசனுர்**
*தமிழ்ப் பேராசிரியர்,*
*பச்சையப்பன் கல்லூரி, சென்னை*

**ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன்**
*ஆசிரியர், கலைமகள், சென்னை*

**ஸ்ரீ ரா. பி. சேதுப் பிள்ளை**
*தமிழ்ப் பேராசிரியர்,*
*சென்னை பல்கலைக் கழகம்*

**ஸ்ரீ எஸ். எஸ். வாஸன்**
*ஆசிரியர், ஆனந்த விகடன்*

**ஸ்ரீ ஆர். மகாதேவன் ('தேவன்')**
*தலைவர், தமிழ் எழுத்தாளர் சங்கம்*

**ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு**
*கவிஞர், சென்னை*

**"குகப்பிரியை"**
*நாவலாசிரியை, சென்னை*

**ஸ்ரீமதி லக்ஷ்மி ராமஸ்வாமி**
*கதாசிரியை, சென்னை*



# நவ பாரத தரிசனம்

## 8

இதோ டம் டம் விமான நிலையம் வந்து விட்டது. நாங்கள் அஸ்ஸாம் ராஜ்யத்துக் குச் செல்ல வேண்டும் அல்லவா ?

விமான நிலையத்தில் எங்களுக்காக நின்று கொண்டிருந்த பிரத்தியேக விமானத்தில் நாங்கள் ஏறிக் கொண்டதும், அது சீறிக் கொண்டு அஸ்ஸாமை நோக்கிப் புறப்பட்டது. சுமார் பத்தாயிரம் அடி உயரத்தில் சென்ற விமானத்திலிருந்து கீழே பார்த்தோம்.

'இதுதான் மைமன் சிங் நகரம்'. 'இதோ பாகிஸ்தானைச் சேர்ந்த மற்றப் பல நகரங் களும் கிராமங்களும் வெகு வேகத்தில் தோன்றி மறைந்து கொண்டிருக்கின்றன.' 'இதுதான் இமயமலை !' 'நூற்றுக்கணக் கான சதுர மைல் பரப்புள்ள அடர்ந்த காடு களைப் பாருங்கள்.' 'இதோ பிரம்மபுத்ரா நதியைத் தாண்டுகிறோம்'.

இவ்விதமெல்லாம் எல்லோரும் விமானத்தி லிருந்து கீழே தோன்றிய காட்சிகளைக் கண்டு









வியந்த வண்ணம் அஸ்ஸாமின் முக்கிய நகர மான கௌஹாத்தியில் வந்து குதித்தோம்.

விமான நிலையத்தில் எங்களை வரவேற்ற அஸ்ஸாம் சர்க்கார் பிரதிநிதிகள், அங்கிருந்து பத்துப் பன்னிரண்டு மைல் தூரத்தில் உள்ள சர்க்கார் விருந்தினர் மாளிகைக்கு எங்களை அழைத்துச் சென்றார்கள்.

வெளிநாட்டு மந்திரிகளும் மாபெரும் தலை வர்களும் அஸ்ஸாமுக்கு விஜயம் செய்யும் போது ஜாகை வசதிக்காக பிரம்மபுத்ரா நதிக் கரையில் ஒரு மாளிகையை அமைத்திருக் கிறார்கள். கம்பீரமான பிரம்மபுத்ராவில் முழு வெள்ளம் போகும்போது, அந்த நதியின் அலைகள் மேற்படி மாளிகையின் படிகளில் மோதிக் கொண்டிருக்கும் அற்புதக் காட்சி எவர் மனத்திலும் இன்ப போதையை உண் டாக்கும் என்பதில் ஐயமில்லை.

அந்த மாளிகையில் நாங்கள் சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்டபின், மறுபடி யும் எங்கள் யாத்திரையைத் தொடங்கினோம்.

சர்க்கார் பஸ்ஸில் புறப்பட்ட நாங்கள் அங்கிருந்து சுமார் இருநூறு மைல் தூரத்தில் உள்ள காண்டா மிருகங்கள் வாழும் காசி ரங்கா என்ற காட்டுப் பிரதேசத்துக்கு இரவு ஒன்பது மணிக்குப் போய்ச் சேர்ந்தோம்.

# அதிசய அஸ்ஸாம்!

**கா**ஸிரங்கா காட்டில் அமைக்கப்பட்டுள்ள பங்களாவை, ஸ்தம்பங்கள் நிறுத்தி இருபது அடி உயரத்துக்குமேலே மரத்தினால் நிர்மாணித்திருக்கிறார்கள். காட்டு மிருகங்களினால் தொந்தரவு ஏற்படாமல் இருப்பதற்காகவே, அவ்விதம் அமைத்திருக்கிறார்கள்.

அங்கு சாப்பிட்டபின் நாங்கள் எங்களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த அறைகளுக்குச் சென்று படுத்துக் கொண்டோம்.

இரவு பன்னிரண்டு மணி இருக்கும். பங்களாவுக்குக் கீழே 'திடீரென்று கூக்குரல் கேட்டது. முதலில் ஒன்றிரு குரல்கள் கேட்டன. பிறகு நூற்றுக் கணக்கான குரல்கள் காதைத் துளைத்தன.

அதனால் விழித்துக் கொண்ட எனக்குச் சூழ்நிலையை உணர்ந்து கொள்ள ஒன்றிரண்டு நிமிஷங்கள் ஆயின. பிறகுதான் நூற்றுக் கணக்கான நரிகளும் ஓநாய்களும் எங்களை வரவேற்பதற்காக நள்ளிரவில் கோஷ்டிகானத்தில் ஈடுபட்டிருக்கின்றன என்பது தெரிந்தது!

கடைசியில், ஒருவழியாகப் பொழுது விடிந்தது. ''யானைகள் எல்லாம் தயாராயிருக்கின்றன, வாருங்கள்'' என்று காஸிரங்கா அதிகாரி ஸ்ரீ ஆர். ஸி. தாஸ் எங்களைக் கூப்பிட்டார்.

அதைக் கேட்டதும் எங்களுடைய இருதயம் 'படக்' 'படக்' என்று அடித்துக் கொண்டது.

டீ சாப்பிட்டு விட்டு எல்லோரும் காலை ஆறு மணிக்குப் புறப்பட்டோம்.

இரண்டு பர்லாங் தூரத்தில் ஒன்பது பிரம்மாண்ட யானைகள் மாவுத்தர்களுடன் தயாராக நின்று கொண்டிருந்தன. ஒவ்வொரு யானையின்மீதும் நாலு பேராக உட்கார்ந்தோம். யானைகள் ஜாம் ஜாம் என்று காட்டைநோக்கி விரைந்தன.

காட்டுக்குள் செல்லப் பாதையாயிருக்கிறது! எனவே, யானைகள் எதிரில் உள்ள எதையும் லட்சியம் செய்யாமல் கிழித்துக் கொண்டும், படுபாதாளக் குட்டைகளில் அனாயாசமாக இறங்கி இடுப்பு வரையில் உள்ள சேற்றை லட்சியம் செய்யாமல் முன்னேறிக் கொண்டும் இருந்தன.

ஆங்காங்கு புதர்கள் சல சல வென்று அசைந்து கொண்டிருந்தன. அதிலிருந்து, யானைகளைக் கண்டு புலிகள், காட்டுப் பன்றிகள், மான்கள் முதலிய மிருகங்கள் பூனைகளைப் போல் பதுங்கி ஓடுகின்றன என்பதைத் தெரிந்து கொண்டோம். அந்தக் காட்டில் எங்களுக்குப் பக்கத்தில் இரண்டொரு கஜதூரத்தில் புலி முதலிய துஷ்ட மிருகங்கள் படுத்துக் கொண்டிருந்தால் கூட அவற்றைக் கண்டு பிடிப்பது கஷ்டமான காரியம்தான்!

அவ்விதம் ஒன்று அல்லது இரண்டு மைல்கள் தூரம்தான் சென்றிருப்போம். அப்போது திடீரென்று நாங்கள் ஏறிச் சென்ற யானையின் மாவுத்தர் மெதுவாக 'சீட்டி' அடித்தார். அவ்வளவுதான்! மற்ற மாவுத்தர்கள் யானைகளை வட்ட வடிவமாகக் கொண்டு வந்தனர்.

எங்கள் மாவுத்தர் சுட்டிக் காட்டிய இடத்தைப் பார்த்தோம். நாங்கள் இருந்த இடத்திலிருந்து சுமார் பத்து கெஜ தூரத்தில் பிரம்மாண்டமான காண்டா மிருகம் ஒன்று கம்பீரமாக நின்று கொண்டிருந்தது.

எங்களைக் கண்டதும் அது சீறியது. அச்சமயம் அதன் மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் புகை வெளிக் கிளம்பியதைப் பார்த்த போது, எங்களுக்குத் திகிலும் பயமும்





ஜெயமணி

உண்டாயின. அது எங்களைப் பார்த்துக்கொண்டும் நாங்கள் அதைப் பார்த்துக் கொண்டும் ஐந்து நிமிஷ நேரம் நின்றோம்.

அந்தக் கொடிய மிருகம் எங்களைத் தாக்குவதா, வேண்டாமா என்று யோசித்துக் கொண்டு நின்றது போலும்!

காண்டாமிருகத்துக்கு நாம் தொல்லை கொடுக்காத வரையில் அது நம்மை எதிர்க்காதென்றும், அவ்விதமில்லாவிடில் அது எதையும் லட்சியம் செய்யாமல் தாக்க முற்பட்டு விடும் என்றும் காசிரங்கா அதிகாரி கூறினார்.

காண்டா மிருகத்தின் மூர்க்கத்தனத்தை நிரூபிக்க அவர் ஒரு விஷயம் சொன்னார். 'உலகில் உள்ள எந்த மிருகத்தையும் பழக்கி விடலாம். சிங்கம், புலி, கரடி முதலிய கொடிய மிருகங்களைக் கூடப் பழக்கி நம் இஷ்டப்படி ஆட்டி வைக்கிறோம். ஆனால் காண்டா மிருகத்தை மாத்திரம் யாராலும் பழக்க முடியாது' என்று அவர் கூறினார்.

அங்கிருந்து இன்னும் ஒன்றிரண்டு மைல்கள் சென்றபின் மேலும் சில காண்டாமிருகங்கள் தென்பட்டன.

அவ்விதம் அடர்ந்த காட்டுக்குள் சென்று திரும்புவதற்குள் ஐந்து காண்டா மிருகங்



கள், இரண்டு காட்டெருமைகள், ஒரு மான், ஒருவகை விசித்திரப் பன்றி இவைகளைப் பார்த்தோம். எங்கள் கண்களில் படாமல் எங்களுக்குப் பயந்து காட்டுக்குள் ஓடிப் பதுங்கிய மிருகங்களும் ஏராளமாக இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

நாங்கள் பார்த்த ஒரு பெரிய காண்டா மிருகத்துக்கு அருகில் பால் குடிக்கும் ஒரு குட்டிக் காண்டா மிருகமும் இருந்தது!

கொடிய மிருகங்கள் கணக்கின்றி வாழும் அடர்ந்த காட்டுக்குள் யாதொரு ஆயுதமும் இன்றிப் பல மைல்கள் தூரம் சென்று காண்டா மிருகங்களை வெகு அருகில் நின்று நேரில் பார்த்த எங்கள் மனத்தில் பல்வேறு உணர்ச்சிகள் பொங்கி எழுந்தன. அது என்றென்றும் மறக்க முடியாத அநுபவம் அல்லவா?

பலவித விசித்திரக் காட்டு மிருகங்களைப் பார்க்க விரும்புவோருக்கு அஸ்ஸாமைக் காட்டிலும் சிறந்த இடம் வேறு எங்குமே இல்லை.

அபூர்வ மிருகமான ஒற்றைக் கொம்பு காண்டாமிருகம் அஸ்ஸாமைத் தவிர உலகிலேயே வேறு எங்கும் இல்லை. 166 சதுர மைல் விஸ்தீரணமுள்ள காசிரங்கா காட்டில் தற்போது 400 காண்டாமிருகங்கள்தான் இருக்கின்றன. மேற்படி தொகை மேலும் குறைந்து விடாமல் இருப்பதற்காக யாரும் காண்டா மிருகங்களை வேட்டையாடக் கூடாதென்று சர்க்கார் தடுத்திருக்கிறார்கள். உலக நாடுகளில் உள்ள மிருகக் காட்சி சாலைகளுக்குக் காண்டாமிருகம் தேவைப்பட்டால், சர்க்கார் குறிப்பிட்ட தொகை வாங்கிக் கொண்டு பிடித்துக்கொடுப்பது உண்டு. ஒரு காண்டாமிருகத்துக்கு வெளிநாடுகளில் 50,000 ரூபாய் வரை விலைகூட விலை கொடுப்போர் இருக்கிறார்கள்!

யானையைப் போல் காண்டாமிருகமும் நூறு வருஷங்களுக்கு மேல் வாழ்கின்றது.

காசிரங்காவைப் போல் அஸ்ஸாமில் பல காடுகள் இருக்கின்றன. இந்தியாவிலே பெரிய காடுகள் இருக்குமிடம் அஸ்ஸாம் ராஜ்யம் தான். அந்தக் காடுகளில் யானைகள், காட்டெருமைகள், புலிகள், கரடிகள், சிறுத்தைகள், கருப்புச் சிறுத்தைகள், பெரும் ஸர்ப்பங்கள், மலைப்பாம்புகள் முதலிய பலவகை மிருகங்கள் அதிகமாக இருக்கின்றன. ஏராளமான விசித்திர பட்சி ஜாலங்களும் அங்கு வாழ்கின்றன.

பர்மாவுக்கு அடுத்தபடியாக உலகிலேயே அதிக யானைகள் இருக்குமிடம் அஸ்ஸாம் தான்.

மேற்படி காடுகளின் அபிவிருத்திக்காக இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பத்து லட்சம் ரூபாய் ஒதுக்கி வைத்திருக்கிறார்கள்.

பத்து மைல் தூரம் யானைகள் மீது அலைந்து திரிந்து விட்டுப் பத்து மணிக்குத் திரும்பி எங்கள் விடுதிக்கு வந்து சேர்ந்தோம்.

கௌஹாத்தியிலிருந்து பதினாறு மைல் தூரத்தில் நிர்மாணிக்கப்பட்டு வரும் உம்த்ரு நீர்ப்பாசன மின்சாரத் திட்டம் பூர்த்தியாக இரண்டு கோடி ரூபாய் செலவாகுமென்று கணக்கிட்டிருக்கிறார்கள். உம்த்ரு நதியில் நிர்மாணிக்கப்பட்டு வரும் அந்த அணைத் திட்டத்தின் மூலம் விவசாயிகளுக்கு நீர்ப்பாசன வசதி ஏற்படும். எனினும் மின்சார சக்தி உற்பத்தியே அத்திட்டத்தின் முக்கிய நோக்கம் என்பதை உம்த்ரு இன்ஜினீர் விளக்கினார்.

அதன் பலனாக அண்டையில் உள்ள பல ஜில்லாக்களுக்கு மின்சார வசதி கிடைப்புதுடன், சிறிய தொழிற்சாலைகளுக்கும் சணல், மாவு, சர்க்கரை மில்கள் போன்ற பெரிய தொழிற்சாலைகளுக்கும் இன்றியமையாத மின்சார வசதி கிடைக்கும்.

* * *

அஸ்ஸாம் ராஜ்யம் இணையற்ற இயற்கைச் சிறப்பு வாய்ந்த தெனினும், அரசியல் விஷயங்களில் அவ்வளவு முன்னேற்றம் அடைந்திருப்பதாகக் கூறமுடியாது. அந்த ராஜ்யத்தில் உள்ள நாகமலையில் நிகழ்ந்து வரும் சம்பவங்களே அதற்குச் சான்றாகும்.

அஸ்ஸாமில் ஏராளமாக மலைகள் இருப்பது போல், பல்வேறு மலை ஜாதியினரும் இருக்கிறார்கள். இந்திய அரசியல் சட்டத்தின்படி அவர்களுக்கு ஓரளவு சுயாட்சி அளிக்கப்பட்டிருக்கிறது. எனினும் நாகமலை வாசிகளான சில விஷமிகள் தங்களுக்கு இந்தியாவுடன் எவ்வித சம்பந்தமுமின்றிப் பூரண சுதந்திரம் வேண்டுமென்று கிளர்ச்சி செய்கிறார்கள்.

அதன் காரணமாக அவர்கள் பலாத்கார முறைகளில் ஈடுபட்டுக் கொலைகளிலும் கொள்ளைகளிலும் இறங்கி யிருக்கிறார்கள். எனவே, இந்திய சர்க்கார் அவர்கள் மீது



பற்கள் சொத்தை யாவதை தடுக்க
ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த அற்புதமான பச்சை 'கோலினாஸ்' டூத்பேஸ்ட்
பற்களை சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது
பற்களைச் சுத்தமாயும் பிரகாசத்துடனும் வைக்கிறது
வாய் நாற்றத்தை அகற்றுகிறது
ஈறுகளுக்குப் பலமளிக்கிறது
Kolynos
'கோலினாஸ்' நுரை தனிச் சிறப்பு வாய்ந்தது




இராணுவ நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படி நேர்ந்திருக்கிறது.

அஸ்ஸாமைச் சேர்ந்த பலவிடங்களுக்கும் நாங்கள் சென்ற போது, நாக மலைகளையும் பார்த்துக் கொண்டு சென்றோம்.

பல ஆண்டுகளாக அங்கு அன்னியப் பாதிரிமார்கள் செய்து வந்த பிரசாரமும், சென்ற மகாயுத்தத்தின் போது நாகமலை வாசிகளுக்குக் கிடைத்த போர்த் தளவாடங்களும் நாகமலை வாசிகளின் மனத்தில் விஷத்தை விதைத்து விட்டன.

இயற்கைச் சிறப்பில் அஸ்ஸாம் கனவு உலகமாகவே காட்சியளிக்கிறது.

கடல் மட்டத்துக்கு மேல் 5000 அடி உயரத்தில் உள்ள அஸ்ஸாம் தலைநகரமான ஷில்லாங் உலகில் உள்ள ஆரோக்கிய ஸ்தலங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.

ஷில்லாங்கிலிருந்து முப்பத்தாறு மைல் தூரத்தில் உள்ள சிரபுஞ்சியில்தான், உலகத்தில் உள்ள வேறு எந்த இடத்தையும் காட்டிலும் அதிக மழை பெய்கிறது

1861-ம் ஆண்டில் மாத்திரம் அங்கு 905 அங்குலம் மழை பெய்ததெனில், அதன் உக்ரத்தை அங்கிருந்து ஆயிரத்து ஐந்நூறு மைல்களுக்கு அப்பால் உள்ள நாம் கற்பனை செய்து கொள்வதும் முடியாத காரியம்.

கௌஹாத்தி நகரிலும் அதற்கு அருகிலும் உள்ள காமாக்ஷி, புவனேசுவரி, உமானந்தா, ஜனார்த்தன, விஷ்ணு, சிவன், ஹயக்ரீவர், மாதவன் கோவில்கள் பிரசித்தி பெற்றவை.

கௌஹாத்தியிலிருந்து நாலு மைல் தூரத்தில் வசிஷ்டாசிரமம் இருக்கிறது. அங்குதான் வசிஷ்ட மகா முனிவர் தவம் புரிந்ததாகக் கூறப்படுகிறது. அந்தப் புனிதப் பிரதேசத்தின் அழகுக்கு, அங்கு ஓடும் சந்தியா, லலிதா, காந்தா இந்த மூன்று ஜீவநதிகளும் அழகு செய்வதாக இருக்கின்றன.

கௌஹாத்தி நகருக்குக் கிழக்கே உள்ள நவக்கிரஹங்களின் கோவில் சரித்திரப் பிரசித்தி பெற்றது. புராதன இந்தியாவில் ஜோதிஷமும் வான சாஸ்திரமும் கற்றுக் கொள்ள விரும்புவோர் நவக்கிரக ஆலயத்துக்குச் செல்லுவது வழக்கமாக இருந்ததாம்.

கௌஹாத்திக்கு ஒரு காலத்தில் ப்ராக் ஜோதிஷபுரி என்றும் அஸ்ஸாமுக்கு காமரூபா என்றும் பெயர்கள் வழங்கி வந்தன என்பதற்கு ஏராளமான ஆதாரங்கள் இருக்கின்றன. இவைபற்றி பாகவதம், ராமாயணம், மகாபாரதம் முதலிய இதிகாச நூல்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த அஸ்ஸாம் பூகம்ப ரேகையில் இருப்பதால், அங்கு அநேகமாகத் தினசரி ஒரு தடவையாவது பூமி அதிர்ச்சி ஏற்படுகிறது! அதனால்தான் பூகம்ப ரேகைப் பிரதேசத்தில் உள்ள வீடுகளை பெல்லாம் மாடிகள் இன்றி மரத்தினால் கட்டியிருக்கிறார்கள்.

அஸ்ஸாமில் ஏராளமான ஆரஞ்சு மரங்கள் இருக்கின்றன. நிறத்திலும் சுவையிலும் அஸ்ஸாம் ஆரஞ்சுக்கு ஈடு அஸ்ஸாம் ஆரஞ்சு தான்! ஒரு பெரிய ஆரஞ்சுப் பழத்தின் விலை அரை அணாதான். தேனினும் இனிய ஆரஞ்சுப் பழங்களைத் தவிர, புளிக்கும்

ஆரஞ்சுப் பழமே அங்கு கிடையாது. அஸ்ஸாமில் காடுகளிலும் மலைகளிலும் எங்கு பார்த்தாலும் மூங்கில் தோப்புகள் அதிகம்.

அஸ்ஸாமில் தேயிலை, பெட்ரோல், நிலக்கரி உற்பத்தித் தொழில்கள்தான் பிரதானமாக விளங்கி வருகின்றன. அந்த ராஜ்யத்தில் உள்ள தேயிலைத் தோட்டங்களின் மொத்த விஸ்தீரணம் நாலு லட்சம் ஏக்கர்கள் ஆகும். அத்தோட்டங்களில் மொத்தம் பத்து லட்சம் தொழிலாளர்கள் வேலை செய்கிறார்கள்.

* * *

பன்னிரண்டாயிரம் மைல்கள் கொண்ட எங்கள் யாத்திரையின்போது, எங்களுக்கு ஓய்ச்சல் ஒழிவே கிடைக்கவில்லை. ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் ஐம்பது, எழுபது, நூறு, நூற்றைம்பது மைல்கள் தூரம் இருந்ததால், பிரயாணத்துக்கும் நவபாரதக் காட்சிகளைப் பார்ப்பதற்கும்தான் எங்களுக்குப் பொழுது சரியாக இருந்தது.

ஏழரை மணிக்குக் காலை ஆகாரம் செய்து விட்டால், பஸ்ஸிலோ, ஜீப்பிலோ, உயர்ந்த மோட்டாரிலோ, சைக்கிள் ரிக்ஷாவிலோ, படகிலோ, யானை மீதோ புறப்பட்டு விடுவோம். பிறகு மத்தியானச் சாப்பாட்டுக்கு இருபது நிமிஷ நேரம் ஓய்வு கிடைக்கும்.

சாப்பிட்ட அரை மணி நேரத்தில் எங்கள் ஸ்தல யாத்திரையை மறுபடியும் தொடங்கி விடுவோம். பிறகு, சுதந்திர பாரதத்தில் நமது நிபுணர்கள் சாதித்துள்ள மற்றும் பல அற்புதக் காட்சிகளைப் பார்த்து விட்டு, இரவு எட்டு மணிக்குத் திரும்புவோம்.

அதிர்ஷ்டவசமாக நாங்கள் மேற்படி யாத்திரைக்குச் சென்ற போது குளிர் காலமானதால், இடைவிடாத பிரயாணம் எங்களுக்கு அதிகக் களைப்பைக் கொடுக்கவில்லை.

காலை ஆறு மணி ஆனதும் ஸ்ரீ கமலகுமார் எங்களை எழுப்ப வந்து விடுவார்.

''சரி, விசுவாமித்திரர் வந்து விட்டார். எழுந்திருப்போம்'' என்பார் என் நண்பர்.

அயோத்தியிலிருந்து விசுவாமித்திரர் ராம லக்ஷ்மணர்களை யாகசாலைக்கு அழைத்துச் சென்றார் அல்லவா? விசுவாமித்திரர் அதிகாலையில் அவர்களை, ''பொழுது விடிந்துவிட்டது. காலைக் கடன்களைச் செய்ய வேண்டிய நேரம் வந்து விட்டது'' என்று கூறி எழுப்பியதாக வால்மீகி ராமாயணம் கூறுகிறது.

எங்களுடைய யாத்திரை முடியும் வரையில், மேற்படி கட்டத்தை எனக்கும் என் நண்பருக்கும் ஸ்ரீ கமலகுமார் ஞாபக மூட்டி வந்தார்! அவர் தினந்தோறும் எல்லோருக்கும் முன்னதாக நாலுமணிக்கே எழுந்து, எங்களை எழுப்புவதற்காக நாங்கள் இருந்த ஒவ்வொரு அறைக்கும் வந்து விடுவார்.

* * *

இவ்விதமாக, கனவு உலகம்போல் தோன்றிய அஸ்ஸாமிலிருந்து நாங்கள் விமானத்தில் மீண்டும் கல்கத்தா வந்து சேர்ந்தோம். கல்கத்தாவிலிருந்து எங்கள் குழுவினர் பரஸ்பரம் விடைபெற்றுக் கொண்டு, அவரவர்களுடைய இருப்பிடத்துக்குப் புறப்பட்டார்கள். நானும் புறப்பட்டுச் சென்னை மாநகர் வந்து சேர்ந்தேன். (முற்றும்)



பாளையங்கோட்டை திரு ஆர். என். சுப்பையா பிள்ளை (ரவணசமுத்திரம்) அவர்களின் குமாரரும் சிறுகதை எழுத்தாளருமான "சாது" என்ற ர. சு. நல்லபெருமாள், பி. ஏ.க்கும் காலஞ்சென்ற திரு சு. சுப்பையா பிள்ளை (பேப்பர் மெர்ச்சென்ட், சென்னை) அவர்களின் குமாரி பாப்பாவுக்கும் தூத்துக்குடியில் 9-7-56ல் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது.

இந்த இதழில் மணமகள் எழுதிய "கர்மயோகி" என்ற சிறுகதை வெளியாகி யிருப்பது குறிப்பிடத்தக்கது. வாழ்க, மணமக்கள்!

# கர்மயோகி

ர. சு. நல்லபெருமாள்



பார்வதி ஒரு அறையில் தனியாக உட்கார்ந்து சுவரில் தொங்கும் படங்களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு வயது அறுபத்தைந்து ஆகிவிட்டாலும் கண் பார்வை கூர்மையாக இருந்தது. அந்த அறையில் பல விதங்களில் காட்சி அளித்த குமாரின் படங்களைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள். பழைய காலத்துப் படங்களாகையால் மிகவும் மங்கலாக இருந்தன.

அவளுடைய வாழ்க்கையில் ஒரு குறைவுமில்லை. அவளுடைய பதினைந்தாவது வயதிலேயே மணமாகி விட்டது. அவளுடைய கணவர் வாசுதேவனைப் பற்றிக் குறை ஒன்றும் கூறமுடியாது. மூன்று ஆண்களையும் இரண்டு பெண்களையும் பெற்றெடுத்தாள். அவர்கள் ஒவ்வொருவருக்கும் நல்ல இடத்தில் மணமாகி விட்டது. அவர்களும் நல்ல நிலையில் இருக்கிறார்கள். பேரக் குழந்தைகள்கூடப் பிறந்து விட்டார்கள். இனி பார்வதிக்கு என்ன கவலை? மஞ்சளும், குங்குமமுமாகத்தான் வாழ்கிறாள். பொறுப்பற்ற வாழ்க்கை. துணைக்கு வயது முதிர்ந்த கணவர் பக்கத்தில் இருக்கிறார். தெய்வ வழிபாட்டிலும், பேரக் குழந்தைகளோடு கொஞ்சுவதிலும், மருமகப் பெண்களின் உபசரிப்பிலும் அவள் பொழுது இன்பமாகத்தான் கழிகின்றது. இருந்தாலும் அவள் மனத்தில் ஒரு நிறைவு இல்லை!

அவளுடைய கணவரின் தமையனார் பேராசிரியர் குமார் இறந்த செய்தியைக் கேட்டவுடன் அவளுடைய கண்கள் கலங்கி விட்டன. குமார், அவ்வளவு இளமையில் இறந்து விடவில்லை. அவருக்கும் வயது எழுபது ஆகிவிட்டது. அவர் இறக்கும்போது, அவருக்குப் பெயரும் புகழும் அதிகம். சிறந்த எழுத்தாளரான குமாரின் மரணத்தைக் குறித்துப் பலர் பல காரணங்களுக்காக வருந்தினர். ஆனால், பார்வதியின் வருத்தத்துக்கு ஒரு தனிப்பட்ட காரணம் இருந்தது

குமாரின் மரணத்தன்று வந்த பார்வதி, பத்தாம் நாள் சடங்கு வரை குமாரின் வீட்டில் தங்கினாள். அந்த வீட்டில் குமாருடைய படங்களைப் பார்க்கும் போதெல்லாம் பார்வதிக்குப் புரிந்து கொள்ள முடியாத ஒரு வேதனை தோன்றியது.

அந்த வீட்டில் மற்றவர்களெல்லாரும் அன்று நடக்கப் போகும் சடங்குக்கு வேண்டிய ஏற்பாடுகளை எல்லாம் செய்து கொண்டிருந்தார்கள். பார்வதிக்கு அதில் எல்லாம் சிரத்தை செல்லவில்லை. பல வருடங்களுக்கு முன் குடும்பத்தோடு எடுத்த ஒரு புகைப் படத்தைக் கூர்ந்து கவனித்து, அதிலுள்ளவர்களை அடையாளம் தெரிந்து கொள்ள முயன்று கொண்டிருந்தாள். முதல் வரிசையில் ஒரு ஓரத்தில் வாட்டசாட்டமாக நின்று கொண்டிருந்த குமாரைக் கண்ட பார்வதியின் கண்களில் நீர் தேங்கியது. குமாரின் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான் அவள் கணவன் வாசுதேவன்.

குமாருக்கும் வாசுதேவனுக்கும் எவ்வளவு வித்தியாசம்! வாசுவை விடக் குமார் ஒரு வயதுதான் மூத்தவன். பார்வதிக்கு என்றுமே அத்தான் குமார்மீது மரியாதையும், அன்பும் உண்டு. அதுவும் குமார், பிற்காலத்தில்

சிறந்த எழுத்தாளனாக மாறியபோது, அவனுக்குக் கிடைத்த பெயரிலும் புகழிலும் அதிகப் பெருமை கொண்டது பார்வதிதான்.

கையிலிருந்த படத்தைச் சுவரில் மாட்டி விட்டு, அடுத்த படத்தைப் பார்த்தான். அது குமாரும் அவன் மனைவியுமாகச் சேர்ந்து எடுத்துக்கொண்ட படம். அதைப் பார்த்ததும் அந்தக் கால நினைவுகள் நெஞ்சில் ஒன்றன் பின் ஒன்றாகப் புரள ஆரம்பித்தன.

** ** **

பார்வதியும், சங்கரியும் சகோதரிகள். பார்வதி இளையவள். இவர்களுடைய அத்தை பிள்ளைகள்தான் குமாரும், வாசுதேவனும். குழந்தைகளாக அவர்கள் வளர்ந்தபோது சங்கரியைக் குமாருக்கும், பார்வதியை வாசுவுக்கும் கல்யாணம் செய்வது என்று பெற்றோர்கள் பேசிக் கேலி செய்வதுண்டு.

குழந்தைகள் வளர்ந்து, அவர்கள் உள்ளமும் வளரும்போது, அந்த உள்ளம் எப்படி உருவெடுக்கும் என்பதைச் சிந்தித்தே பார்க்காமல் பெற்றோர்கள் நிச்சிந்தையாக இருந்து விட்டார்கள். குழந்தைகளாக இருந்தபோது விளையாட்டுக்காகப் பேசிக் கொண்டதை, அந்தக் குழந்தைகள் வளர்ந்த பிறகு, உண்மையிலேயே நிறைவேற்றப் பெற்றோர்கள் முனைந்தார்கள்! அப்போதுதான் யாரும் எதிர்பாராத பெரிய அதிர்ச்சி ஏற்பட்டது!

குமார் சங்கரியை மணப்பதற்கு மறுத்து விட்டான். அவனுடைய வைராக்கியத்தைக் கலைக்கப் பலர் பலவிதமாகப் பாடுபட்டார்கள். குமார் அசைந்து கொடுக்கவில்லை. அவனுடைய போக்கு யாருக்குமே புரியவில்லை. சங்கரி நல்ல அழகிதான். இருந்தும் குமார் அவளை மணக்க மறுத்ததின் காரணம் தெரியவில்லை. அந்தக் காரணத்தை அவன் யாரிடமும் சொல்லவுமில்லை. இன்றுவரையில் யாருக்கும் அதன் ரகசியம் தெரியாது.

தன் தமக்கையைக் குமார் மணக்க மறுத்து விட்டதை அறிந்ததும் பார்வதிக்குக் கோபம் தான் வந்தது. குமார்மீது அவளுக்கு வெறுப்புக்கூட ஏற்பட்டு விட்டது.

** ** **

ஒருநாள், சங்கரியை மணக்கக் குமார் மறுப்பதன் காரணத்தை நேரில் தானே கேட்க வந்தாள் பார்வதி. அப்போது குமார் மட்டும்தான் வீட்டில் இருந்தான். இவள் போகும்போது குமார் ஒரு சாய்வு நாற்காலியில் சாய்ந்த வண்ணம் அந்தி வானத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். பார்வதி நேரடியாகவே பேச்சை ஆரம்பித்துவிட்டாள்.

''அத்தான்! நான் கேட்பதற்கு நீ சரியாகப் பதில் சொல்ல வேண்டும்'' என்றாள் பார்வதி.

குமார் ஒன்றும் பேசாமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்ன, சொல்லுவாயா?'' என்று கேட்டாள் பார்வதி மீண்டும்.

''சரி, கேள்'' என்றான்.

''சங்கரியைக் கலியாணம் செய்து கொள்ளுவதற்கு ஏன் மறுக்கிறாய்?''

''என்னவோ விருப்பமில்லை.''

''அவள் அழகுக்கு என்ன குறை?''

''யார் குறை சொன்னது?''

''பின்பு ஏன் மறுக்கிறாய்? குழந்தைப் பிராயத்தில் பெரியவர்கள் பேசிக் கொண்டதற்கு மாறாக நீ ஏன் நடக்க வேண்டும்?''

குனிந்திருந்த தலையை நிமிர்த்தினான் குமார். பார்வதியைக் கூர்ந்து பார்த்தான்.

''பெரியவர்களை யார் அப்படிப் பேசச் சொன்னது?''

''ஏன், இதில் என்ன தப்பு?''

''என்ன தப்பா? குழந்தையாக இருந்தபோதே எனக்கு அவள்தான் மனைவி என்று முடிவு கட்டி விட்டால், அப்பொழுதே கலியாணத்தையும் நடத்தியிருக்கலாமே. அப்படி நடந்திருந்தால் இப்போது நான் மறுக்க வேண்டிய அவசியமே வந்திருக்காதே.''

இப்படிப் பேசும்போது, குமாரின் குரல் கம்மியது. கண்களில் நீர் பெருகியது.

''அவர்களுடைய மனம் எப்படிச் சங்கடப்படுகிறது, தெரியுமா?'' என்றாள் பார்வதி.

''பார்வதி, என் உள்ளம் எப்படிச் சுக்கு நூறாக நொறுங்கியிருக்கிறது, தெரியுமா?''

இதற்குமேல் அவனால் பேச முடியவில்லை. கண்களிலிருந்து கண்ணீர் மளமளவென்று பெருகியது. பார்வதி திகைத்து விட்டாள்.

** ** **

''ஏன் அத்தான், எத்தனை நாளைக்குத்தான் நீ இப்படிப் பிரம்மச்சாரியாகவே இருக்கப் போகிறாய்?'' என்று கேட்டாள் ஒரு நாள்.

''ஏன் உனக்கு அந்தக் கவலை? நான் கலியாணம் செய்து கொள்ளாததால், நீ வாசுவை மணக்க முடியவில்லையே என்று தவிக்கிறாயா? நான் ஒன்றும் குறுக்கே நிற்கவில்லையே?'' என்று கூறிக் குறும்பாகச் சிரித்தான்.

''உங்களுக்கு எப்பொழுதும் கேலிதான்.''

''அதோ வாசுவே வருகிறானே. .டேய் வாசு, பார்வதியை எப்போது கலியாணம் செய்து கொள்ளப் போகிறாய்? அவள் என்னிடம் வந்து குறை சொல்கிறாளே!'' என்றான்.

''இப்பொழுது என் கல்யாணத்துக்கு என்ன அவசரம்? நீயே இன்னும் கலியாணம் செய்துகொள்ள வில்லையே! அதற்குப் பிறகு அல்லவா எங்கள் கலியாணத்தைப் பார்க்க வேண்டும்?'' என்றான் வாசு, ஓரக் கண்ணால் பார்வதியைப் பார்த்தவாறே. அவள் இதையெல்லாம் காதில் வாங்காதவளைப் போல் வேறு எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள்.

''நான் கலியாணமே செய்து கொள்ளப் போகிறதில்லை. எனக்காக நீங்கள் காத்திருக்க வேண்டாம்'' என்று கூறிவிட்டு அங்கிருந்து போய் விட்டான் குமார்.

''அத்தான் ஏன் இப்படித் திடீரென்று போய் விட்டான்?'' என்றாள் பார்வதி.

''கொஞ்ச நாட்களாகவே இப்படித்தானிருக்கிறான். மனசிலே உள்ளதைச் சொல்லவும் மாட்டேன்கிறான்'' என்றான் வாசு.

குமார் தனியாக வாழ்வதைப் பார்க்கப் பார்வதிக்கு வேதனையாகத் தானிருந்தது. தினமும் அவனைத் தொந்தரவு செய்யவும் ஆரம்பித்தாள்.

''அத்தான்! நான் சொல்லுவதைக் கேட்கவில்லை என்றால் அப்புறம் நான் உன்னோடு பேசவே மாட்டேன்'' என்று பார்வதி ஒரு நாள் அவனோடு தனிமையில் பேச வாய்ப்பு கிடைத்தபோது சொன்னாள்.

# இதோ உங்கள் புதிய நாணயங்கள்




இப்போது எதை எண்ணும்போதும் ரூபாய், அணா, பை என்றுதான் எண்ணுகிறீர்கள். ஆனால் உங்கள் நலனைக் கருதி 1957 ஏப்ரல் 1-ந் தேதி முதல் நமது இந்திய சர்க்கார் தசாம்ச நாணயங்களை உபயோகத்துக்குக் கொண்டுவர முடிவு செய்திருக்கிறார்கள்.

இப் புது நாணய முறையினால் 100 நயா பைசாக்கள் கொண்டதாகும் ஒரு ரூபாய். கீழ் கொடுத்துள்ள ஏழுவித புதிய நாணயங்கள் புழக்கத்திற்கு வரும்.

100 நயா பைசா .. ( ஒரு ரூபாய் )
50 நயா பைசா .. ( அரை ரூபாய் )
25 நயா பைசா .. ( கால் ரூபாய் )
10 நயா பைசா..(ரூபாயில் 10ல் ஒரு பாகம்,
5 நயா பைசா..(ரூபாயில் 20ல் ஒரு பாகம்)
2 நயா பைசா..( ரூபாயில் 50ல் ஒரு பாகம் )
1 நயா பைசா..(ரூபாயில் 100ல் ஒரு பாகம்)

### 3 முக்கிய விஷயங்கள்

- ஒரு ரூபாய் மதிப்பில் குறையாது ; கூடாது. இப்போது உள்ளது போலவே ஸ்டாண்டர்டு நாணயமாயிருக்கும்.
- பழைய நாணயங்கள் படிப்படியாக-வாபஸ் பெறப்பட்டு புதிய நாணயங்கள் புழக்கத்திற்கு வரும். ஆனால் பழைய நாணயங்களும் புதிய நாணயங்களும் குறைந்த பக்ஷம் 3 வருடங்களாவது புழக்கத்தில் இருக்கும்.
- இம்மூன்று வருட இடைக்காலத்தில் பழைய அல்லது புதிய நாணயங்கள் அல்லது இரண்டுமோ வாங்கவோ கொடுக்கவோ செல்லுபடியாகும்.



''என்னை என்ன செய்யச் சொல்கிறாய்?''

''சீக்கிரம் நீ ஒரு கலியாணம் செய்துகொள். சும்மா இப்படிப் பித்துப் பிடித்த மாதிரி எத்தனை நாள்தானிருக்கப் போகிறாய்? சங்கரியை நீ மணக்க மாட்டேன் என்று சொல்லுவது நியாயமில்லை. எனக்காகவாவது இந்தக் கலியாணத்துக்குச் சம்மதிக்க வேண்டும். அல்லது அவள்மீதுள்ள குற்றத்தையாவது சொல்லு'' என்றாள் பார்வதி. குமார் பேசாமலிருந்தான்.

''இந்தக் கலியாணத்துக்குச் சரி என்று சொல்லு...சொல்லு சொல்லு அத்தான்.... சொல்லேன்....'' பார்வதி கெஞ்சினாள். என்ன நினைத்தானோ, 'சரி' என்று சொல்லி விட்டான், குமார்! பார்வதிக்கு மகிழ்ச்சியில் தலைகால் தெரியவில்லை. அத்தான் கலியாணத்துக்குச் சம்மதித்ததின் பிறகு தான் பார்வதிக்கு நிம்மதி ஏற்பட்டது.

குமாரும் பார்வதியும் குழந்தையிலிருந்தே பிரியாமல் வளர்ந்தவர்கள். அவனிடத்தில் அவளுக்கு ஒரு தனி பிரியம்; வாஞ்சை. எப்போதும் சிரித்த முகத்தோடு குறும்புக்காரனாகத் திரிந்த அத்தான், வாடிய முகத்தோடு பிரமை பிடித்தவனாய் உள்ளம் ஒடுங்கிக் கிடப்பதைப் பார்க்கும்போது, பார்வதியால் எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? ஆனால், அதே சமயத்தில் பார்வதிக்கு ஒரு பயமும் பிடித்துக் கொண்டது. 'பிடிக்காத பெண்ணை மணம் முடிக்கச் சம்மதம் பெற்று விட்டோமே. கலியாணத்துக்குப் பிறகு, சங்கரியோடு சந்தோஷமாக அத்தான் இருப்பானா?' என்ற சந்தேகம் வந்தபோது, பார்வதியின் இதயத்தில் பயம் சூழ்ந்துகொண்டது.

கலியாணமாகி விட்டால் குமார் மாறி விடுவான் என்றுதான் நினைத்தாள். அந்த நம்பிக்கையில்தான் குமாரின் திருமணத்துக்கு முனைந்து நின்றாள். கலியாணத்துக்குப் பிறகு எந்தவித அசம்பாவிதமும் நடந்து விடவில்லை. சங்கரி ஆனந்தமாகவே வாழ்ந்தாள். குமாரும் மகிழ்ச்சியுடன் காணப்பட்டான். இரண்டு குழந்தைகளைப் பெற்றான். குறைவற்ற வாழ்க்கையே நடத்தினான். இருந்தாலும், அவனுடைய முகத்தில் வேதனையின் சாயல் மாறாமலே இருந்தது.

** ** **

**பா**ர்வதியின் சிந்தனை கலைந்தது. குமாரின் மூத்த மகன் சுந்தரம் அறையினுள் நுழைந்து பார்வதியின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டான்.

''அழுகிறாயா, சித்தி?'' என்று கேட்டான்.

''இல்லை. கண்ணிலே ஏதோ தூசி விழுந்தது'' என்று கூறிச் சமாளித்துக் கொண்டாள்.

''அப்பாவின் படங்களெல்லாம் இங்கே தான் இருக்கின்றன, பார்த்தாயா? அதோ பார், அப்பாவுக்குப் பொன்னாடை போர்த்திய போது எடுத்த படம். இந்தப் படத்தைப் பார்த்தாயா? அவர் எழுதிய புத்தகத்துக்குப் பரிசாகப் பதினாயிரம் ரூபாய் கொடுத்த போது எடுத்தது'' என்று பல படங்களைப் பார்வதிக்குக் காட்டினான் சுந்தரம்.

''நல்ல பெயரோடும் புகழோடும் போய்ச் சேர்ந்தான்'' என்று கூறி ஒரு பெருமூச்சு விட்டாள் பார்வதி.



''என்ன சித்தி, நீ எப்பொழுதும் அப்பாவை 'அவன்' 'இவன்' என்றுதான் கூப்பிடுவாயா?''

''இன்றைக்கா கூப்பிடுகிறேன்? எனக்கு விவரம் தெரிந்த நாள் முதலாக அப்படித் தான் கூப்பிடுகிறேன். உங்கப்பாவுக்குக் கலியாணம் ஆனபிறகு, ஒரு தடவை 'நீங்கள்' என்று கூப்பிட்டதற்கு என்னுடன் சண்டைக்கே வந்து விட்டான். அது ஒரு காலம்.''

சுந்தரம் ஒன்றும் பேசாமல் இருந்தான்.

''ஆனால், அத்தான் சாகிற வரைக்கும் ஒரு ரகசியத்தை யாரிடமும் சொல்லாமலேயே போய் விட்டான். அவன் மற்றவர்கள் முன்னாலே எவ்வளவோ மகிழ்ச்சியோடு காணப்பட்டாலும் அவனுடைய உள்ளத்திலே ஏதோ ஒரு வேதனை இருந்து அரித்துக் கொண்டே இருந்தது. உண்மையில் அந்த வேதனை இல்லாமலிருந்தால் அவன் நூறு வயதுக்கு வாழ்ந்திருப்பான்'' என்று கூறிப் பார்வதி பெருமூச்சு விட்டாள்.

''நானும் அதைக் கவனித்திருக்கிறேன், சித்தி. ஆனால், ஏன் இப்படி இருந்தார் என்றுதான் கண்டு பிடிக்க முடியவில்லை.''

''ஐம்பது வருஷங்களாக அவன் வேதனையைச் சுமந்து கொண்டே வாழ்ந்திருக்கிறான்.''



**ஒருவர் :—இப்படித்தான் வனமகோத்ஸவம் என்று செடியை நட்டு விடுவார்கள். உடனே அதை ஆடு தின்று விட்டுப் போய்விடும்.**

**மற்றொருவர்:—அதுதான் இந்தச் செடியினிடம் நடக்காது; அவர் ஆடு தொடாச் செடியை அல்லவா நடுகிறார்?**

---

"அப்பாவின் டைரியெல்லாம் இந்த அலமாரியிலேதான் இருக்கிறது. அவர் இருக்கிற வரை இந்த அறைக்குள்ளே யாரையும் வர அனுமதிக்க மாட்டார். ஒழிந்த வேளைகளிலே அந்த டைரிகளைப் புரட்டிப் பார்த்தால் தெரியும் என்று நினைக்கிறேன்" என்றான் சுந்தரம். இந்தச் சமயத்தில் கீழே யாரோ புது விருந்தினர்கள் வந்திருப்பதாகத் தகவல் வரவே, சுந்தரம் கீழே போய் விட்டான்.

பார்வதி எழுந்து போய்த் தென்புறத்து அலமாரியைத் திறந்தாள். அலமாரியில் பல புத்தகங்கள் நிரம்பியிருந்தன. மேல் தட்டில் டைரிகளாக அடுக்கப்பட்டிருந்தன. பார்வதி ஆவலோடு அவைகளை எடுத்துப் புரட்டிப் பார்க்க ஆரம்பித்தாள்.

ஐம்பது வருஷங்களுக்கு முன் எழுதப்பட்ட ஒரு டைரியைப் படித்தபோது பார்வதியின் கண்களிலிருந்து நீர் பெருகி வழிந்தது. டைரியில் அந்தப் பக்கத்தை வாசித்தாள் :

"என் உள்ளத்தில் பார்வதி குடி புகுந்த பிறகு, சங்கரியை எப்படி மணப்பது?"

இதை மீண்டும் மீண்டும் வாசித்தாள். அந்த வயது முதிர்ந்த ஜீவனின் இதயத்தில் பலப்பல உணர்ச்சிகள் பின்னிச் சுழன்றன. அந்த அதிர்ச்சியை அவளால் தாங்க முடியவில்லை. அவள் கொஞ்சமும் எதிர்பாராத செய்தி அது. அவளால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியவில்லை. ஐம்பது வருஷங்களாகப் புரியாத பெரிய புதிர் ஒன்று புரிய ஆரம்பித்தது. அது புரியும்போது வேதனையும் இருந்தது; பரிதாபமும் இருந்தது.

இரண்டு மூன்று பக்கங்களைத் திருப்பினாள். அதில்—"என்னுடைய காதலை யாரிடம் கூறி முறையிடுவது? தம்பிக்கு என்று பெரியோர்கள் குழந்தைப் பருவத்திலேயே முடிவு செய்து விட்ட பார்வதியை நான் காதலிக்கிறேன் என்று எப்படிக் கூறுவது? இந்தக் காதல் சரியா, தவறா என்பது எனக்குப் புரியவில்லை. ஆனால், இந்தக் காதல் சிதைந்து விடும் என்று தெரிந்தும் காதலிக்கிறேன்" என்று எழுதி யிருந்தது.

பார்வதியின் விரல்கள் இன்னும் இரண்டு மூன்று பக்கங்களைப் புரட்டின.

"என்னுடைய காதலை வெளிப்படுத்திப் பிறரை நோக வைப்பதை விட, நானே கைகூடாத காதலை எண்ணி நொந்து கொள்ளுவது மேல்." இதைப் படித்தபோது, பார்வதியினால் அழுகையைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. அவளுடைய முதிர்ந்த மனம் படாத பாடு பட்டது. ஒரு குடும்பத்தின் மகிழ்ச்சிக்காகத் தன் சுகத்தையே தியாகம் செய்த அத்தானுக்காக அவள் அழுதாள்.

பார்வதியின் உள்ளம் குழம்பித் தவித்தது.

'எவ்வளவு வைராக்கியம்! எவ்வளவு அடக்கம்! இவ்வளவு பெரிய வேதனையை உள்ளத்திலேயே ஒளித்து வைத்துக் கொள்ளும் சக்தி எப்படி வந்தது? என்னைக் காணும் போதெல்லாம் குமுறி எழும் காதல் உணர்ச்சிகளை எவ்வளவு இரகசியமாக மறைத்திருக்கிறான்! சிந்தித்துக் கூடப் பார்க்க முடியவில்லையே. ஒரு வார்த்தையாவது என்னிடம் சொல்லியிருப்பானா, அத்தான்! சாதாரண மனிதன் இல்லை. தன் குறையைக் கூறாது உள்ளத்திலேயே குமைய விட்டு வாழ்ந்த கர்மயோகிதான்.' பார்வதியின் உடல் சிலிர்த்தது.

* * *

"பாட்டி! அம்மா எல்லாரும் கோயிலுக்குப் போகிறார்கள். உன்னையும் கூப்பிட்டார்கள்" என்று கூறிக்கொண்டே அவளுடைய மகன் வயிற்றுப் பேத்தி வந்தாள். அவள் வாசித்த டைரியைத் தன் பெட்டியினுள் வைத்துப் பூட்டினாள். அந்த டைரி இனி யாருடைய கண்ணிலும் பட்டுவிடக் கூடாது என்பதுதான் அவள் விருப்பம். அந்த இரகசியம் இனி யாருக்கும் தெரிந்து ஆக வேண்டியதும் இல்லையே.

அன்று நெல்லையப்பர் கோயிலில் அம்மன் சன்னதியில் பார்வதி நிற்கும்போது அவள் மனம் உருகி விட்டது.

"அம்பிகே! என்னுடைய வாழ்க்கையில் ஒரு குறையும் வைக்கவில்லை. கணவரும் நல்லவர்தான். நான் பெற்ற குழந்தைகளும் நல்லவர்கள்தான். ஆனால், என்னால் ஒரு ஜீவன் ஐம்பது வருஷங்களாக வேதனையில் ஆழ்ந்த பாவத்தை என் மீது சுமத்தி விடாதே. எல்லோரும் வாழ, தன் சுகத்தைத் தியாகம் செய்த அத்தான் கர்மயோகிதான். அவனை உன் பாதத்தில் சேர்த்துக் கொள்."

பார்வதியின் கண்களிலிருந்து கண்ணீர் ஆறாகப் பெருகியது. அவ்வளவு உருக்கமாக என்றுமே தன் மனைவி பக்தி கொண்டதை யறியாத வாசுதேவன், அவளையே புன்முறுவலோடு பார்த்தவாறு நின்றார்.





# பூனைக் கதை

ஒரு பூனை அடுப்பங் கரையில் தூங்கிக் கொண்டிருந்தது. ராத்திரி யெல்லாம் எலிக்சாக விழித்துக் கொண்டிருந்தது. பாவம், பகலில் நன்றாகத் தூங்கிப் போயிற்று.

பக்கத்தில் அதன் மூன்று குட்டிகளும் படுத்துத் தூங்கின.

பூனை ஒரு கனவு கண்டது. தான் ஒரு புலியாகி விட வேண்டும் என்று அதற்கு எப்போதும் ஆசை. ஆனபடியால் அன்று கனவில் தான் புலியாகப் போய் விட்டதாகக் கண்டது.

புலி ஒரு ஆட்டைத் தூக்கிக் கொண்டு ஓடிற்று. ஆட்டின் சொந்தக்காரனுடைய நாய் புலியைத் தூக்கிக் கொண்டு வந்தது. புலி ஓடிற்று. நாய் அதை விட வேகமாக ஓடிப் புலியின் அண்டையில் வந்து விட்டது.

புலியான பூனை தன் பழைய சுபாவத்தால் ஒரு மரத்தின் மேல் ஏறித் தப்பித்துக் கொள்ளப் பார்த்தது. ஆனால புலியாய் விட்ட பூனைக்கு மரம் ஏற முடியவில்லை. இடைரென்று மறுபடியும் கனவில் புலி பூனையாய் விட்டது. மரத்தின் மேல் ஏறித் தப்பித்துக் கொண்டது.







பூனை விழித்துக் கொண்டது.

"நல்ல வேளை நான் புலியல்ல, பூனையே! இல்லா விட்டால் அந்த நாய் என்னைக் கடித்துக் கொன்றே போட்டிருக்கும்" என்று சந்தோஷப்பட்டது. அந்தச் சந்தோஷத்தில் எழுந்து ஓடிப் போய் ஒரு மரத்தின மேல் ஏறி அணில் ஒன்றைப் பிடிக்கப் பார்த்தது. அணில் பூனைக்குச் சிக்கவில்லை. கீழே இறங்கிச் சமையல் அறைக்குள் போய், பாலோ தயிரோ ஏதாவது திறந்து வைத்திருக்கிறார்களா என்று பார்த்தது. ஒன்றும் கிடைக்கவில்லை. எல்லாம் பத்திரப் படுத்தி யிருந்தார்கள். மறுபடியும் படுத்துத் தூங்கிற்று.

* * *

மறுபடியும் தான் நாயாகி விட்டதாகக் கனவு கண்டது.

ஒரு திருடன் வந்தான். 'வள்' 'வள்' என்று கத்துவதற்குப் பதிலாக 'மியாவ்' 'மியாவ்' என்றது. யாரும் எழுந்திருக்கவில்லை. திருடன் வீட்டுக்குள்ளே புகுந்து சாமான்களெல்லாம் எடுத்தான். பால் பாத்திரத்தை எடுத்துப் பாலைக் கீழே கொட்டி விட்டுப் பாத்திரத்தைத் தூக்கிக் கொண்டு ஓடி விட்டான்.

திருடனை மறந்து விட்டுக் கீழே சிந்திப் போன பாலைப் பூனை நக்க ஆரம்பித்தது. வீட்டுக்காரி எழுந்திருந்து, 'இந்த நாய் உபயோகமில்லை' என்று துடைப்பக் கட்டையை எடுத்து ஒரு அடி போட்டாள். அடிபட்டதாகக் கனவு கண்டதும் பூனை விழித்துக் கொண்டது.

"நல்ல வேளை, நான் நாயல்ல!" என்று சந்தோஷப்பட்டது. ஓடி, வீட்டுக்காரியின் கால்களைச் சுற்றிக் கொண்டும் உராய்ந்து கொண்டும் அன்பு காட்டியது. "புலியும் வேண்டாம்; நாயும் வேண்டாம். நான் பூனையாகவே இருப்பேன்" என்று 'மியாவ்', 'மியாவ்' என்று சந்தோஷமாகக் கத்திற்று.

அது சொன்னது வீட்டுக்காரிக்குத் தெரியவில்லை. பூனையின் பேச்சுக்கள் நமக்கு விளங்காது. அதன் குட்டிகளுக்குத்தான் விளங்கும். 'அதுவே சரி!' என்று குட்டிகள் மூன்றும் கத்தின.








அப்பா
விஷயம் தெரிந்தவர்
அவன் அப்பா விஷயம் தெரிந்தவர்
அவர் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ்
பேபி பவுடர் வாங்கி வருகிறார்.
என்ன குளுமை! என்ன மென்மை!
அந்தக் குழந்தையின் சருமத்திற்கு
எவ்வளவு இனிமையானது!
Johnson's
ஜான்ஸன்ஸ் பேபி பவுடர்
Johnson's
BABY
POWDER
இலவசம்
குழந்தை பராமரிப்பு புத்தகத்தின்
இலவச பிரதிக்கு எழுதுங்கள். பெற்
றோர்களுக்கு வேண்டிய அநேக
விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன.
சுலபமாகப் படித்து புரிந்து கொள்
ளும்படியான இங்கிலீஷ் பாஷையில்
எழுதப்பட்டுள்ளது.
ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன்
பி.ஓ. பாக்ஸ் 1970, டிபார்ட்மெண்ட் 30 K
பம்பாய்
JB3023




# பேனா எங்கே?

ராமு, குப்பன், மாடசாமி, வேலு எல்லாரும் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். ராமுவின் தகப்பனார் அவசரமாக வந்து, "ராமு! இங்கே வா!" என்று கோபத்தோடு அவனைத் தனியாகக் கூப்பிட்டார். ராமு நடுங்கிக் கொண்டே அவர் அருகில் வந்தான்.

"டேய்! முன் வாசலில் நான் பேனாவை மறந்து வைத்து விட்டு வீட்டுக்குள் போய் விட்டேன். திரும்பி வந்ததும் அதைக் காணவில்லை. இவர்கள் யாராவது எடுத்திருப்பார்களோ?" என்றார்.

"ஏழைச் சிறுவர்கள் மீது அபாண்டப் பழி சுமத்தக் கூடாது!" என்றான் ராமு.

ஆனால், அவன் தந்தை அதைப் பொருட்படுத்தாமல், "டேய், பசங்களா! முன் வாசலிலிருந்த பேனாவைக் காணவில்லை. பேனாவை எடுத்தவர்கள் தெரியாமல் இருந்த இடத்திலேயே கொண்டு போய் வைத்து விடுங்கள்! இல்லா விட்டால் உங்களைப் போலீஸ்காரர்களிடம் பிடித்துக் கொடுத்து விடுவேன்!" என்று பயமுறுத்தி விட்டு உள்ளே போய் விட்டார்.

சிறிது நேரம் கழித்து அவர் வெளியே வந்தார். ஆச்சரியமும் திகைப்பும் அடையும்படியாக ஆளுக்கு ஒரு பேனாவாக மூன்று பேனாக்கள் இருந்தன.

"அட! நான் தொலைத்தது ஒரு பேனாத்தானே? இத்தனை பேனாக்கள் எங்கிருந்து வந்தன?" என்று வியப்புடன் கேட்டுக் கொண்டே ராமுவின் தகப்பனார் பேனாக்களை ஆராய்ந்தார்.

"அப்பா! உங்கள் பேனா தங்க மூடி போட்டதல்லவா? இவை சாதாரணப் பேனாக்களாக இருக்கின்றனவே!"

"ஆமாம்! நான் கோபத்தில் இவர்களைப் பயமுறுத்தியதைக் கண்டு பயந்துபோய் ஆளுக்கொரு பேனாவை அவரவர்கள் வீட்டிலிருந்து கொண்டு வந்து வைத்து விட்டார்கள் போலிருக்கிறது. பாவம்! இவர்கள் யாரும் என் பேனாவை எடுக்கவில்லை என்று இதிலிருந்தே தெரிகிறது" என்று சொல்லி வருத்தப்பட்டார். ஆனால் அவர் சொந்தப் பேனா எங்கே மறைந்தது என்பது மட்டும் அவருக்குப் புரியவில்லை.

ராமுவின் நண்பர்கள் மூவரும் அப்புறம்தான் பயம் நீங்கி நிம்மதி அடைந்தார்கள். ராமு தன் நண்பர்களிடம் அவரவர்கள் பேனாக்களைத் திருப்பிக் கொடுத்தான். அவர்கள் அவற்றைப் பெற்றுக் கொண்டு வீடு திரும்பினார்கள்.

மறுநாள் காலையில் ராமுவின் தகப்பனார் ஆபீசுக்குப் போவதற்காகப் பஸ் ஸ்டாண்டில் கால் கடுக்க நின்று கொண்டிருந்தார். அப்பொழுது அவர் வீட்டுச் சலவைத் தொழிலாளி தன் கழுதையுடன் அந்தப் பக்கம் போய்க் கொண்டிருந்தான்.

இவரைக்கண்டதும் "எசமான்! இங்கேயா நிற்கிறீங்க! நேற்று நீங்க துணி வெளுக்கப் போட்டதிலே, ஒரு சட்டைப் பையில் இந்தப் பேனா இருந்ததுங்க" என்று சொல்லி அவர் பேனாவை எடுத்துக் கொடுத்தான்.

"வீணாக அந்தப் பிள்ளைகள் மீது சந்தேகப் பட்டேனே" என்று வருத்தப்பட்டார் ராமுவின் தகப்பனார். —நண்டுமணி



# தெருவில் வந்த புலிகள்

விசுவம்





பானு அடுத்த வீட்டு வாசலில் இருந்த மரத்தின் மீது மாம்பழம் பறிப்பதற்காக யாருக்கும் தெரியாமல் ஏறிக் கொண்டிருந்தான். அப்போது வேலிக் கம்பியிலிருந்த முட்கள் அவன் வலது கையில் கிழித்து விட்டன.

காயத்தைக் கண்ட அவன் தாயார் கவலையுடன் என்னவென்று கேட்டாள்.

"தெருக்கோடியில் ஒரு புலி என்னைத் துரத்திக் கொண்டு ஓடி வந்து என் கையில் கிழித்துவிட்டது" என்று தாயார் நம்பும்படியாக ஒரு பொய்யைச் சொன்னான் பானு.

"ஏண்டா, நிஜமென்றுநடுத்தெருவில் புலி எப்படி வந்தது?" என்று சந்தேகத்துடன் கேட்டாள் அவன் தாயார்.

"மிருகக் காட்சிசாலையிலிருந்து தப்பி ஓடி வந்திருக்கும்" என்றான் பானு.

"சரி; இப்போது அந்தப் புலி எங்கே?" என்று கேட்டாள்.

"அந்தப் பக்கமாக ஓடி விட்டது!" என்றான் பானு.

அவன் தாயார் பானு சொன்னதை உண்மை என்றே நம்பி விட்டாள்.

பானுவின் தந்தை ஆபீஸிலிருந்து வந்ததும் பானுவின் தாயார் அவரிடம் புலி வந்த விஷயத்தைப் பரபரப்புடன் கூறினாள். அவர் ஒரு பெரிய சர்க்கார் அதிகாரி. உடனே அவர் போலீஸ் ஸ்டேஷனுக்கு டெலிபோன் செய்தார். "என்ன அக்கிரமம்? மிருகக் காட்சிச் சாலையிலிருந்த புலிகளில் ஒன்று தப்பி ஓடி ஊருக்குள் நடமாடிக் கொண்டிருப்பது கூடத் தெரியாமல் நீங்கள் எல்லோரும் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று அதிகார தோரணையில் பேசினார். உடனே, அந்த ஸ்டேஷனில் இருந்த ஸப்-இன்ஸ்பெக்டர், போலீஸ்காரர்கள் எல்லோரும் பயந்து விட்டார்கள். உடனே மிருகக் காட்சிச் சாலைக்கு டெலிபோன் செய்து விசாரித்தார்கள்.

ஸப்-இன்ஸ்பெக்டர் மறுகணமே மோட்டார் சைக்கிள் மீது கிளம்பினார். போலீஸ் லாரியும் பின்னோடு புறப்பட்டது.

மிருகக் காட்சி சாலை அல்லோல கல்லோலப்பட்டது. மேற்படி காட்சிச் சாலையின் அதிகாரி வேலைக்காரர்களிடம் 'ஜூ'வில் உள்ள மொத்தப் புலிகள் எத்தனை என்று கேட்டார்.

"மொத்தம் ஆறு புலிகள்" என்றான் ஒரு வேலைக்காரன்.

"இல்லை? ஏழு" என்றான் மற்றொரு சிப்பந்தி.

"ஆறு அல்லது ஏழா!" என்று அதட்டினார் அதிகாரி. எல்லோருக்கும் சந்தேகம் வந்து விட்டது. புலிக்கூண்டைத் திறந்து மொத்தம் எத்தனை புலிகள் என்று எண்ணிப் பார்த்தார்கள். ஆறு புலிகளே இருந்தன.

புலிகள் படுத்துத் தூங்கப் பொதுவாக ஒரு குகை இருந்தது. அதில் போய்ப் பார்த்தார்கள். குகை காலியாகக் கிடந்தது.

"குகை காலியாக இருப்பதால் ஒரு புலி தப்பி ஓடித்தான் இருக்க வேண்டும்!" என்ற முடிவுக்கு வந்தார்கள்.

உடனே புலி பிடிக்கும் கூண்டு லாரியுடன் மிருகக்காட்சிச் சாலை அதிகாரியும் சிப்பந்திகளும் அவசரம் அவசரமாகக் காணமற் போன புலியைத் தேட வெளியே புறப்பட்டார்கள்.

அந்த நகரத்தின் சந்து பொந்துகள், தெருக்கள், தோட்டங்கள் முதலிய எல்லா இடங்களிலும் புலியைத் தேடிக் கொண்டு சுற்றினார்கள். நாற் சந்தியில் நின்று



வண்டிகளுக்குக் கைகாட்டிக் கொண்டிருந்த போலீஸ்காரரை விசாரித்தார்கள்.

"ஒரு புலிகூட அந்தப் பக்கம் வரவே யில்லை" என்றார் நாற்சந்தி போலீஸ்காரர்.

இதற்குள் அடுத்த தெருவில் கூட்டமாக ஆறு புலிகள் ஓடிக் கொண்டிருப்பதாக ஸப்-இன்ஸ்பெக்டருக்கு தகவல் கிடைத்தது. உடனே அனைவரும் துப்பாக்கி சகிதம் அடுத்த தெருவுக்குப் பறந்து சென்றார்கள்.

மிருகக் காட்சிச் சாலையில் சிப்பந்திகள் புலிக் கூண்டைத் திறந்து மொத்தம் புலிகள் எத்தனை என்பதை எண்ணிப் பார்த்தார்கள் அல்லவா? அந்தக் கலாட்டாவில் எல்லாரும் புலிக் கூண்டின் கதவை மறந்து போய் மூடாமலேயே விட்டு விட்டார்கள்.

சிப்பந்திகள் எல்லோரும் போய் விட்டதும் கூண்டுக் கதவு திறந்து கிடப்பதைக் கண்ட புலிகள் ஒன்று கூடிப் பேசிக்கொண்டு வெளியே தப்பி ஓடி விட்டன. தப்பி ஓடிய புலிகள் ஊருக்குள் போய்த் தெருத் தெருவாக அட்டகாசம் செய்தன.

பாலு தெரு வாசலில் வந்து எதையோ வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது அந்தப் புலிகளில் நிஜமாகவே ஒரு புலி பாலுமீது பாய்ந்து கீறி விட்டு ஓடியது. நல்லவேளை! பாலுவை அந்தப் புலி அத்துடன் விட்டு விட்டது. அவனும் தப்பிப் பிழைத்தான்.

தெருவில் வந்த ஆறு புலிகளையும் போலீஸார் சாமர்த்தியமாக மடக்கிப் பிடித்துக் கொண்டு வண்டியில் ஏற்றினார்கள். மிருகக் காட்சிச் சாலைச் சிப்பந்திகள் அந்த ஆறு புலிகளையும் கண்டு விட்டு, "இந்தப் புலிகள் எங்கிருந்து வந்தன?" என்று அதிசயப் பட்டதுடன் காட்சிச் சாலைக்கு மேலும் ஆறு புலிகள் கிடைத்தது பற்றி மிகவும் சந்தோஷப் பட்டார்கள். எல்லாரும் காட்சிச் சாலையை அடைந்த பிறகுதான் அங்கே கூண்டில் இருந்த ஆறு புலிகளும் தப்பி ஓடி விட்டதை அறிந்தார்கள். அதே புலிகளைத்தான் தெருவிலிருந்து பிடித்து வந்திருக்கிறார்கள் என்று தெரிந்ததும் எல்லாரும் பெருத்த ஏமாற்றமும் வெட்கமும் அடைந்தார்கள்.

மிருகக் காட்சிச் சாலை அன்று முதல் ஒழுங்காகவும் பத்திரமாகவும் பாதுகாக்கப்பட்டு வந்தது. மிருகங்கள் ஒரு குட்டி போட்டாலும் உடனே கணக்கு எழுதி வைத்துக் கொண்டார்கள்.

பாலுவுக்கு மட்டும் ஆச்சரியம் தாங்கவில்லை. தான் பொய்யாகச் சொன்னது நிஜமாகவே பலித்து விட்டதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். நல்லவேளையாகத் தான் தப்பியது பற்றிச் சந்தோஷப் பட்டான். இனி பொய் சொல்லுவதில்லை என்றும் தீர்மானித்துக் கொண்டான். பாலுவின் பெற்றோர்கள் மட்டும் பாலு சொன்னதை உண்மை என்றே இன்னமும் எண்ணிக் கொண்டிருக்கிறார்கள்!

### சென்ற இதழில் வெளியான புதிருக்கு விடை

1. முதல் படத்தில் ஆகாய விமானம் மேகத்தின் பின்னால் மறைந்திருக்கிறது.

2. இரண்டாவது படத்தில் ஒரு கறுப்பு உடையணிந்த பெண் அமாவாசை இருட்டில் கரி எடுக்கிறாள்.

3. மூன்றாவது படம் ஒரு 'ஸ்லேட்'. கரும் பலகை உடைந்து விட்டதால் வெறும் சட்டம் மட்டும் இருக்கிறது.




வேடிக்கை விளையாட்டு
ஒரு அட்டையைக் கோழி முட்டை போல் கத்திரித்துக் கண்களுக்கு இரண்டு வட்டமான துவாரங்களை வெட்டிக்கொள். வேறு ஒரு நீள அட்டையில் வளைவான கோடுகள் இரண்டு போட்டுக் கொண்டு உருவத்தின் பின்னால் வைத்துக் காது போல் உள்ள இரண்டு அட்டைகளை மடித்துக்கொள். பிறகு கோடு போடப்பட்ட அட்டையை மேலும் கீழும் இழுத்தால் விழிகள் வேடிக்கையாக அசைவதைக் காணலாம்.
சீதா:—பறவைகளை அடிக்காதே! அது ரொம்பப் பாவம்!
—நான் அடிக்கவில்லை சீதா! சீடையை ஒவ்வொன்றாகக் குரங்கின வாய்க்கு அனுப்பிக் கொண்டிருக்கிறேன்!
பெரிய முள் (சின்ன முள்ளிடம்):—கொஞ்சம் பொறு! மறுபடியும் உன்னை ஒரு மணி நேரத்தில் வந்து சந்திக்கிறேன்!
ஆஸ்திரேலியா
"ஆஸ்திரேலியாவைக் கண்டு பிடிப்பதற்கு முன்னால் எது உலகிலேயே மிகப் பெரிய தீவு?"
சாமா
"என் பாட்டி சமுத்திரத்தையே பார்த்ததில்லை. ஆனால் பல தடவை அதில் ஸ்நானம் செய்திருக்கிறாள்!"
"இது என்ன புதிர்? கடலையே பார்க்காதவள் அதில் எப்படி ஸ்நானம் செய்ய முடியும்?"
"பாட்டிக்குப் பேரன் பிறந்தான். ஆனந்தக் கடலில் மூழ்கினாள்! தெருவில் சுவாமி வந்தார். பக்திக் கடலில் மூழ்கினாள்! வயது எண்பது ஆகிறது. இன்னும் சம்சார சாகரத்தில மூழ்கிக் கொண்டிருக்கிறாள்.....!"






அவனைப் பொறுத்த மட்டிலும்
கவலையே வேண்டாம்.
ஏனெனில் அவன்

# லாக்டோஜனில் வளருகிறான்.

ட 8/6/18

"லாக்டோஜன்" ஸிந்தி புரோகிராமைக் கேளுங்கள்
ரேடியோ ஸிலோன் 41 மீடர் பாண்டு

பிரதி ஞாயிறுதோறும் இரவு 7-45 மணியிலிருந்து 8 வரை
பிரதி வியாழன்தோறும் இரவு 8-30 மணியிலிருந்து 8-45 வரை

விவரங்களுக்கு எழுதவும்:-

நெஸில்ஸ் பிராடக்ட்ஸ் (இந்தியா) லிமிடெட்,

| த. பெட்டி நெ. 398 | த. பெட்டி நெ. 315 | த. பெட்டி நெ. 180 |
| --- | --- | --- |
| கல்கத்தா | [illegible] | மதராஸ் |




# ஆனந்த சாகரம்

ஆர். எஸ். ஞானம்பாள்

மேல் துண்டை உருவிக் கழுத்தைச் சுற்றிப் போட்டுக் கொண்டு நடந்தார் அவர். சிந்தனையின் வேகம் நடையிலும் பிரதிபலித்தது. 'சே! சே! என்ன உலகம்! என்ன வாழ்வு! கட்டிய மனைவி சொன்னபடி கேட்பதில்லை என்றால் ஒருவனுக்குச் சுகம் ஏது? சௌக்கியம் ஏது? நிம்மதி தான் ஏது? என்ன இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு இவ்வளவு துடுக்குத்தனம் கூடாது.

நேற்றுத்தான் கல்யாணமான புது தம்பதியா, ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளாமல் சண்டையிட்டுக் கொள்வதற்கு? நாளைக்குப் பெண்ணுக்குக் கல்யாணம் செய்தால், பேரன், பேத்தி எடுக்க வேண்டியவளாயிற்றே!'

இரவெல்லாம் விளக்கு எரித்துக் கொண்டு படிக்கும் இந்தப் புருஷன் எனக்கு வேண்டாமென்று மேல் நாட்டில் ஒருத்தி விவாகரத்து பெற்றாளாமே! அதுபோல் அல்லவா இருக்கிறது! இது பாரத புண்ணிய பூமியானதால் அவ்வளவு தூரத்துக்குப் போகவில்லை. ஆனால் அதற்கும் மேலாக அவரை எடுத்தெறிந்து அல்லவா பேசிவிட்டுப் போய் விட்டாள்!

பார்க்கப்போனால் அற்ப விஷயம். நடேசனுக்கு ஒரு அத்தை இருக்காள். அவளுக்கு ஒரே பெண். அவளைத் தான் நடேசனுக்குக் கொடுப்பதாக இருந்தது. ஆனால் நடேசன் பிடிவாதமாக மீனாவை மணந்து கொண்டார்.

அவர் அத்தைக்கு இப்பொழுது பார்வை மங்கிவிட்டது. பெண்ணுக்கும் கணவன் வகையாக அமையவில்லை. எந்நாளும் அவன் நோய்ப் படுக்கையில் படுத்துக் கிடந்தான். வருமானமும் போதாது. எல்லாம் சேர்ந்து அத்தையின் பாடுதான் கஷ்டமாயிருந்தது.

ஏதோ காரியமாக ஊருக்குப் போயிருந்த நடேசனுக்கு அத்தையும், அவள் பெண்ணும் படும் துயரத்தைக் காணச் சகிக்கவில்லை. அவர்கள் உதவிக்கு அவரை நாடாவிட்டாலும், அவர்களுக்கு உதவி செய்வது

தமது கடமை என்று அவர் நினைத்தார். மீனுவிடம் தம் எண்ணத்தைக் கூறினார். "அத்தைக்கு மாதந்தோறும் நாற்பது ரூபாய் அனுப்பலாம் என்றிருக்கிறேன்!" என்றார்.

"ஏன், உங்கள் அத்தை கேட்டாளா?" என்று விசாரித்தாள் மீனு.

"கேட்பாளா? அவள் ரொம்ப மானி. அதிலும் நான் அவள் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளவில்லை யென்று அவளுக்கு உள்ளூற வருத்தம். அப்படி யிருக்கும்போது என்னை உதவி செய்யச் சொல்லிக் கேட்பாளா? நானாகத்தான் ஏதாவது செய்யலாம் என்றிருக்கிறேன்!" என்றார்.

"அப்படி நீங்கள் உதவி செய்தால் உங்கள் அத்தை பெண்ணின் கணவர் தவறாக நினைக்க மாட்டாரா?" என்று கேட்டாள் மீனு.

மீனுவின் கேள்வி நடேசனது இதயத்தின் ஏதோ ஒரு நுட்பமான மூலையைத் தாக்கி விட்டது. "இதென்ன பேச்சு, மீனு? என் அத்தைக்கு நான் பணம் அனுப்புகிறேன். நான் விரும்பினால் என் அத்தையை என் வீட்டுக்கே கூட அழைத்துக் கொண்டு வந்து வைத்துக் கொள்வேன். அவளுக்கு மாமியார் என்ற உறவோடு சரி. நான் அவள் ரத்தத்தைப் பங்கிட்டுக் கொண்டு பிறந்தவன், தெரியுமா?" என்று பொங்கினார்.

"போதும், உங்கள் பிதற்றல்! கொஞ்சம் யோசனையோடு பேசுங்கள்! குருட்டையும், செவிட்டையும் இழுத்துக் கொண்டு வந்தால், அதையெல்லாம் கட்டிக்கொண்டு துன்பப்பட என்னால் முடியாது! கையில் பணம் துள்ளினால் கல்யாணத்துக்கு இருக்கும் பெண்ணுக்கு ஏதாவது நகை செய்து போடுங்கள். உங்கள் அத்தைக்கு ஒன்றுமே அனுப்ப வேண்டாம்!" என்றாள் மீனு.

மீனுவின் பேச்சு நடேசனுக்கு நாராசமாக ஒலித்தது. மீனுவுக்கு என்றுமே மெள்ளப் பேச வராது. இதற்காக அவர் அவளை எத்தனையோ தடவை கேலிகூடச் செய்திருக்கிறார்.

"ஏன் இப்படிக் கத்துகிறாய், கொல்லிமலைக் குறத்திமாதிரி?" என்று கேட்ட அவர் வார்த்தைகளிலே இன்று ஆத்திரம் அதிகமாகத் தொனித்தது.

மீனுவுக்கு அழுகையே வந்து விட்டது. நல்லவேளையாகக் குழந்தைகள் யாரும் வீட்டில் இல்லை, இந்த அலங்கோலத்தைக் காண. நடேசனைக் கட்டெரித்து விடுபவள் போல் உற்றுப் பார்த்த மீனு, இன்னது தான் பேசுகிறோம் என்று உணராமல், "நான் குறத்திதான்; உங்கள் அத்தை பெண் ராஜத்தையே மணந்திருக்கலாமே? இப்பொழுது வேண்டுமானால் அத்தை வீட்டோடு போயிருங்கள். நாலு வீட்டில் உழைத்து என் குழந்தைகளைக் காப்பாற்றிக் கொள்ள எனக்குத் தைரியமுண்டு. கடவுள் என்னைக் கைவிட மாட்டார்!" என்று விம்மினாள்.

"என்ன?..என்ன சொன்னாய்?" என்று கோபத்துடன் கை ஓங்கிய அவர் முன்னால் அவள் நிற்கவேயில்லை.

மணி ஆறடித்தது. முகம்கூடக் கழுவாமல் எண்ணெய்க் கிண்ணத்துடன் அவள் ராமர் கோவிலுக்குப் புறப்பட்டு விட்டாள்.

போகட்டும். அவள் கோவிலுக்குப் போவதை யார் தடுக்கப் போகிறார்கள்? ஆனால் அவள் 'கோவிலுக்குப் போகிறேன், வீட்டைப் பார்த்துக் கொள்ளுங்கள்' என்று கூடச் சொல்லாமல் போனதுதான் அவர் மனத்தை உறுத்தியது. 'என்ன அகம்பாவம்! என்னை என்னவென்று நினைத்து விட்டாள்! நாம் நல்ல நிலைமையில் இருக்கிறோம்; சிரமப்படுகிறவர்களுக்கு உதவலாம் என்றால் கண்டபடியெல்லாம் பேசுகிறதா? குட்டிச் சுவருக்கு ஆவது போல் வயசாகியும் பேச்சைப் பார் பேச்சை! எத்தனை வயசானால் என்ன? இந்தப் பெண்களுக்குச் சந்தேகம் மட்டும் போகவே போகாது போலிருக்கிறது!'

வீட்டில் தங்க மனமில்லாமல் தோட்டக்காரனை அழைத்து வீட்டைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டு அவர் வெளியே புறப்பட்டார். என்ன வெளியே போய் என்ன? எண்ணச் சுழலில் சிக்கிய மனத்துக்கு விடுதலையே கிடைக்கவில்லை.

மீனுவின் புத்தி போன போக்கை நினைத்து அவர் மனம் அங்கலாய்த்தது. இதற்கு முன் மீனு இப்படியா இருந்தாள்? இப்படி இருந்திருந்தால் அவர் இவ்வளவு தூரம் முன்னேறியிருக்க முடியாதே! இத்தனை வருஷங்களில் அவர்கள் எந்த விஷயத்துக்கும் இவ்வளவு தீவிரமாகப் பூசலிட்டது கிடையாது. அவள் சொல்லுக்கு அவர் மதிப்பு தராமல் இருந்ததே இல்லை; அவளும் அவர் கூறும் முடிவுக்கு மாறு சொன்னதே இல்லை. மீனு மட்டும் தான் மாறி விட்டாளா?

நடேசனின் நடைவேகம் தடைப்பட்டது. ஆமாம், அவர் மாறவில்லையா? அவளை அடிக்கக் கை ஓங்கியதின் அர்த்தம் என்ன? அவரும் மாறித்தான் போய்விட்டார். அவளை அதிகமாகப் புகழ அவருக்குத் தெரியாது; ஆனால் அவளை அவர் இகழ்ந்து பேசியதே இல்லை. நடேசனுக்குக் கவலையாக இருந்தது, முழுத்தவறுமே தம்முடையதுதானோ என்று!

குடும்பத்தின் நலனை உத்தேசித்துத்தான் மீனு அப்படிச் சொல்லி யிருக்கிறாள். கடன் வாங்காமல் பெண்ணின் கல்யாணத்தை முடித்துவிட வேண்டுமென்ற ஆவல் இருவருக்கும் பொதுவானதுதானே? அத்தைக்கு அனுப்பும் பணத்தைப் பாங்கியில் போட்டால் சமயத்துக்கு உதவும் என்று அவருக்கும் தெரியும். ஆனால் அவர் அத்தைக்குத் தம்மால் ஆனதைச் செய்ய வேண்டும் என்று ஆசைப்பட்டார். பெண்ணின் கல்யாணம் முடிந்த பின் அத்தையைப் பற்றி யோசிக்கலாம் என்றால் பையனின் கல்லூரிப் படிப்புச் செலவு வந்து விடும். அல்லது, யார் கண்டார்கள்? அதற்குள் அத்தையின் ஆயுளே முடிந்து போய் விட்டால்..?

அத்தைக்குக் கட்டாயம் பணம் அனுப்புவது என்று நடேசன் தீர்மானித்து விட்டார். மீனுவிடம் இன்னொரு முறை நல்லபடியாகச் சொல்லிப் பார்ப்பது. ஒப்புக் கொண்டால் சரி. ஒப்புக் கொள்ளாவிட்டால் போகட்டும். அவர் சம்பாதிக்கிறார், அவர் செலவு செய்கிறார். மீனுவுக்குத் தெரிய வேண்டிய அவசியம் என்ன?

நடேசனின் மனம் திடுக்கிட்டது. மீனுவுக்குத் தெரியாமல் அனுப்புவதா? அவளறியாத ரகசியமும் அவரிடம் உண்டா? நடேசனால் அதற்கு மேல் நடக்கவே முடியவில்லை. அப்





# 'அனாஸின்'

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ளது.

அனாஸின் விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனாஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. கப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் சிறமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினாஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.

அனாஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனாஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனாஸினையே கேட்டுவாங்குங்கள்.




**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

பொழுதுதான் அவர் கவனித்தார், எண்ணப் போக்கில் வீட்டை விட்டு இரண்டு மைல் தூரம், ராமர் கோவிலையும் தாண்டி வந்து விட்டார் என்பதை!

பாவம், குழந்தைகள் இருவரும் காத்திருப்பார்கள், ஊருக்குப் போய் ஒரு வாரம் கழித்துத் திரும்பிய அப்பாவைப் பார்த்துப் பேச. மீனுவும் கோவிலிலிருந்து அப்பொழுதே திரும்பி யிருப்பாள். 'இன்னும் காணுமே' என்று உள்ளுக்கும் வாசலுக்கும் ஆயிரம் நடை நடந்து கொண்டு தானிருப்பாள். கோபம், வருத்தம், வெறுப்பு எல்லாம் அடங்கி வீட்டுக்குத் திரும்பும் எண்ணமே மனத்தில் மேலோங்கி யிருந்தது. வந்த வழியே திரும்பி மீண்டும் இரண்டு மைல் நடக்க விரும்பாமல், குறுக்கு வழியே போக நினைத்துக் கலிங்கராயன் சந்தில் புகுந்தார். சந்தைக் கடந்து கோட்டை மேடேறினால், நேரே நடக்க வேண்டியதுதான்; ஒரு பர்லாங்கு போனால் வீடு வந்து விடும்.

கலிங்கராயன் சந்து அன்று போலவே கொஞ்சமும் மாறாமல் இருந்தது. நகரின் மற்றப் பகுதிகளில் தாண்டவமாடும் நாகரிகமும், சீர்திருத்தமும் இன்னும் அதுவரை எட்டவில்லை. நடேசன் மூச்சைப் பிடித்துக் கொண்டு மேடேறினார். காலின் ஆடு சதை இழுத்துக் கொண்டு விண், விண்ணென்று வலித்தது. 'ஹூம், கிழவனாகிக் கொண்டிருக்கிறேன். மூச்சு இரைக்கிறது. இந்த மேட்டில், உச்சி மேட்டில், உச்சி வெயிலில் எத்தனை தடவை ஏறியிருப்பேன்! மீனுவும் நானும் போட்டி போட்டுக் கொண்டு மேடேறிய நாட்கள் எத்தனை! ஆகா!'

அந்த நாட்களுக்கு ஈடு அவையே தான். ஆனந்த சாகரத்தில்தான் இருந்தார்கள். அவர்கள் குடியிருந்த வீட்டுக்கும் அதே பெயர் அமைந்த பொருத்தம்தான் ஆச்சரியமானது. இரண்டே அறைகளும், ஒரு தாழ்வாரமும் கொண்ட அந்த அதிசய மாளிகைக்கு 'ஆனந்த சாகரம்' என்று மீனுவும் நடேசனுமாகச் சேர்ந்துதான் பெயரிட்டனர். அப்பெயர் நிலைத்து விட்டது. பத்து வருஷங்கள் அந்த வீட்டில் இருந்தனர். ஆசைக்கு ஒரு பெண்ணும், ஆஸ்திக்கு ஒரு பிள்ளையும் பிறந்து, அவர்கள் வாழ்வு வளம் பெற்றதும் அந்த வீட்டில்தான். அந்த வீட்டின் சுவர்களுக்கு மட்டும் வாயிருந்தால், அவர்கள் குடும்பம் நடத்திய அழகையும் அன்பின் பெருக்கையும் கண்டு அமர காவியம் ஒன்று பாடி யிருக்காதா!

உத்தியோகம் உயர்ந்து, பண வசதி பெருகிற்று; இடமும் போதவில்லை. எனவே 'எக்ஸ்டென்ஷ'னில் சொந்த வீடு கட்டிக்கொண்டு குடியேறினார்கள். அந்த வீட்டையும் பழுதுசொல்ல முடியாது. அதில் குடிபோன வேளை எல்லாம் கூடியே வந்தது. ஆனால், 'ஆனந்த சாகரத்'தில் நடத்திய வாழ்வுக்கு ஈடாகுமா நடேசன் மனத்தில் ஆசை கொப்புளித்தது, தாங்கள் வாழ்ந்த வீட்டைக் காண.

யார் குடியிருக்கிறார்களோ, தெரியவில்லை. மீனுவுக்கு வம்பு என்றால் கொஞ்சம் பிடிக்கும். அடிக்கடி அக்கறையாக விசாரித்துக் கொண்டு வருவாள், 'ஆனந்த சாகர'த்தில் யார் இருக்கிறார்கள் என்று. நாலைந்து மாதங்களுக்கு முன் மீனு கூறியது நினைவுக்கு வந்தது.

"இந்த வேடிக்கையைப் பாருங்கள். 'ஆனந்த சாகரத்'தை விட்டு நாம் வந்ததிலிருந்து அதற்குப் புதுத் தம்பதிகளாகவே தான் குடிவருகிறார்களாம். நேற்று கோவிலுக்குப் போய்விட்டு அந்தத் தெரு வழியாக வந்தேன். என்னவோ தோன்றியது உள்ளே நுழைந்தேன். ஒரு சிறு பெண்—மகாலட்சுமி மாதிரி இருக்கிறாள். போனதும் 'வாருங்கள் அத்தை!' என்று வாய் நிறையக் கூப்பிட்டாள். வீட்டை ஒரு முறை கவனித்துப் பார்த்தேன்; வெகு நன்றாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். நான் அடுப்பு வைத்திருந்த இடத்தில்தான் அவளும் வைத்திருக்கிறாள். காப்பிப் பொடி அரைக்கும் இயந்திரம் பொருத்தப்பட்டிருந்த இடம் கூட மாறவில்லை. கிழக்குப் பார்த்த சுவரில் பெரிய கண்ணாடி. மேற்குச் சுவர் ஓரமாக ஒரு ஸ்டூல் மேலே வெள்ளை உறை போட்டுச் சுருட்டி





**பெரிய காக்கை :—** இப்பொழுது 'கா' 'கா' என்று கத்துவதற்குத் தெரிந்துகொண்டாயா?

**காக்கைக் குஞ்சு :—** தெரிந்து விட்டது. இன்னும் ஒன்றுதான் தெரியவேண்டும். யாராவது ஊரிலிருந்து வரப் போவதை நீ எப்படி முன் கூட்டியே தெரிந்து கொண்டு கத்துகிறாய்? அதைச் சொல்லிக் கொடு !

---

யிருந்த இரண்டு மெத்தைகள்-எல்லாவற்றையும்பார்த்ததும் எனக்குத்தான் சின்னப் பெண் மாதிரி வெட்கமாக இருந்தது. அந்தப் பெண் குளித்து நாளாகி யிருக்குமென்று தோன்றியது. விசாரித்தேன். வெட்கத்துடன் தலை குனிந்து கொண்டாள். அவள் கணவர், ஒருவரும் இல்லை என்று நினைத்துக் கொண்டு, 'கமலு! நம் மணிப் பயலுக்காக ஒரு வெல்வெட் சட்டை பார்த்து வைத்திருக்கிறேன். கடைக்குப் போகலாம், வருகிறாயா ?' என்று கேட்டு உள்ளே நுழைந்தார். அந்தப் பெண்ணுக்கு வெட்கம் தாங்க முடியவில்லை. என்னைப் பார்த்ததும், அவர் முகத்தில் அசடு தட்டியதே......அடடா ! அதைப் பார்க்க ஆயிரம்கண் போதாது. உங்களுக்கு நினைவிருக்கிறதல்லவா ? ஊரிலிருந்து எங்கள் தமையனும் மன்னியும் ஒருதரம் வந்திருந்தபோது. நீங்கள் இதேமாதிரி ஏதோ என்னிடம் சொல்லிக் கொண்டே நுழைந்தீர்கள். அவர்கள் நம்மைக் கேலி செய்து அழவைத்தார்களே!''

''ஆமாம். அப்புறமும் எத்தனை நேரம் அவர்கள் வயிற்றெரிச்சலைக் கிளப்பிக் கொண்டு அங்கேயே இருந்தாய் ?'' என்றார்.

''என்னை ஒன்றும் அவ்வளவு இங்கிதம் கெட்டவள் என்று எண்ணுகிறீர்கள்! உடனேயே அந்தப் பெண்ணைக் குங்குமம் கொடுக்கச் சொல்லி இட்டுக் கொண்டு புறப்பட்டு விட்டேன். அங்கே போய் விட்டு வந்ததில், எனக்கென்னவோ 'டானிக்' சாப்பிட்ட மாதிரி, இருபது வயசுப் பெண்ணைப் போல ஒரு புது பலமே வந்து விட்டது'' என்றாள்.

ஆனந்தசாகரத்தின் வாசலில் நடேசன் சற்றே தயங்கினார். உள்ளே இருந்து பேச்சுக் குரல் கேட்டது. 'மீனுவின் குரல் போலிருக்கிறதே ! அவள் கோவிலுக்குப் போகவில்லையா ? என்னைப் போலவே அவளும் சென்றதை நினைத்து நிம்மதி தேடி இங்கே வந்து விட்டாளா ?'

''நான் வருகிறேன், அம்மா! நேரமாகிறது. வீட்டில் குழந்தைகளும், அவரும் என் வரவை எதிர்நோக்கி யிருப்பார்கள் !''

சந்தேகமே இல்லை; மீனுவேதான்.

''இருங்கள், அத்தை ! வெற்றிலை சீவல் வாங்கிக் கொண்டு போகலாம்'' என்றது ஒரு இளம் பெண்ணின் குரல்.

நடேசன் சற்றுத் தைரியமாகவே உள்ளே நுழைந்தார். தாழ்வாரத்தில் அமர்ந்து ஏதோ படித்துக் கொண்டிருந்த வாலிபன் ''வாருங்கள் ! நீங்கள் யார் ? என்ன வேண்டும்?'' என்று வரவேற்று விசாரித்தான்.

வெளியே வந்த மீனு அவரைக் கண்டதும் மகிழ்ச்சியுடன், ''நான் இங்கே வந்தது உங்களுக்கு எப்படித் தெரியும்? கோவிலிலிருந்து வரும்போது இங்கே நுழைந்தேன். இதைக் கேட்டீர்களா ? நான் நாலு மாதங்களுக்கு முன் வந்தபோது இருந்தவர்கள் இல்லை இவர்கள். அந்தப் பெண் பிறந்தகம் போனதும் அவர்களை வேறு ஊருக்கு மாற்றி விட்டார்களாம். அதற்குப் பதில் வந்தவர்கள் தான் இவர்கள். மணமாகி இரண்டு மாசம் தான் ஆகிறதாம். முதலில் குடித்தனம் போட்டதே 'ஆனந்த சாகரத்'தில்தானாம்.''

''மிக்க மகிழ்ச்சி, சார் ! 'ஆனந்த சாகரத்'தில் உங்கள் வாழ்க்கை மிகவும் ஆனந்தமாகவே நடக்கும் என்பதில் எங்களுக்குச் சந்தேகமில்லை. ஒருவருக்கொருவர் கொஞ்சம் விட்டுக் கொடுக்கிற மனப்பான்மைமட்டும் இருந்தால், எந்த வீட்டில் இருந்தாலும் சம்சார சாகரம், ஆனந்த சாகரமாகத்தான் இருக்கும். என்ன மீனு ?'' என்று இளம் தம்பதிகளுக்கு உற்சாகமாக உபதேசம் செய்தவாறே நடேசன் மீனுவைப் பார்த்தார், பொருள் பொதிந்த பார்வையில்.

''சந்தேகம் என்ன ?'' என்று கணவனை ஆமோதித்த மீனு, ''சரி, புறப்படுவோமா ? நாங்கள் போய் வருகிறோம், அம்மா !'' என்று அந்தப் பெண்ணிடம் விடைபெற்றுக் கொண்டாள். நடேசனும் புறப்பட்டார்.

தெருவில் இறங்கியதுமே மீனு பேச ஆரம்பித்து விட்டாள். ''இதோ பாருங்கள்! நான் சொன்னதை எல்லாம் மனத்தில் போட்டுக் கொள்ளாதீர்கள். என்னவோ ஆத்திரத்தில் பட படவென்று பேசிவிட்டேன். பெரியவர்கள் வயிறு குளிர்ந்து வாழ்த்தினால், நம் குழந்தைகளுக்கு எல்லாம் நிறைந்து வரும். அந்தைக்கு இந்த மாதத்திலிருந்தே பணம் அனுப்ப ஆரம்பித்து விடுங்கள். அடுத்த முதல் தேதிவரை பொறுத்திருக்க வேண்டாம். என்னிடம் பணம் இருக்கிறது. நாற்பது ரூபாய் தானே வேண்டும் ?'' என்றாள். அது அவள் உள்ளத்திலிருந்து வரும் பேச்சு என்பதை அவளுடைய குரலே எடுத்துக் கூறியது.

''இல்லை, மீனு! இருபது ரூபாயே போதும். அத்தையின் கஷ்டத்தைப் பார்த்துப் பொங்கிய இரக்கத்தின் வேகத்தில் நாற்பது ரூபாய் அனுப்ப எண்ணினேன். நம் நிலைமைக்கு அவ்வளவு பெரிய தொகையை நிரந்தரமாக அனுப்ப முடியுமா? குழந்தையின் கல்யாணத்துக்காகவும் ஏதாவது சேர்க்க வேண்டாமா ? அதனால் அவள் கல்யாணம் ஆகும் வரையில் மாதம் இருபது ரூபாய் பாங்கியில் போடத் தீர்மானித்திருக்கிறேன்!'' என்றார் நடேசன்.

ஆனந்த சாகர வாழ்க்கை அவர்களுக்கு மீண்டு விட்டது என்பது அந்தத் தம்பதிகளின் மலர்ந்த முகங்களிலிருந்து நன்கு தெரிந்தது.

---

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10
for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam


PEARS TRANSPARENT SOAP
எவ்வளவு நிர்மலமானது பாருங்கள்
வெளிச்சத்துக்கு எதிரே பிடித்தால் பியர்ஸ் சோப்புக் கட்டியின் மூலமாக நீங்கள் ஊடுருவிப் பார்க்க முடியும்! பியர்ஸ் நிர்மலம் என்றால் அது தான்! க்ளிஸரின் கலந்த பியர்ஸ் சோப் பச்சிளங் குழந்தையின் மென்மையான சருமத்துக்கும் பூரணமான பாதுகாப்புத் தருகிறது.
எவ்வளவு நல்லதென்று உணருங்கள்
பியர்ஸ், சருமத்துக்குப் புது மெருகும் போஷாக்கும் அளித்துப் பல்லாண்டுகள் மிருதுவாகவும் எழிலோடும் வைத்திருக்கிறது. அந்தக் காரணத்துக்காகவே, உலகெங்கும் உள்ள அழகிகள் பியர்ஸ் சோப்பைப் பிரதிதினமும் உபயோகித்து தமது மேனியின் நவ யௌவனக் களையைப் பாதுகாத்து வருகிறார்கள்.
பியர்ஸ் சோப்பை வழக்கமாக உபயோகப் படுத்தத் தொடங்குங்கள். அது எவ்வளவு நல்லதென நீங்களும் உணர்ந்து கொள்வீர்கள்
PEARS TRANSPARENT SOAP
பியர்ஸ் சோப்
அசல் க்ளிஸரின் கலந்த அழகு தரும் சோப்

